

# மதுரை மாவட்டத்தில் கல்கி

KALKI 9.3.86 ரூ. 1.50

# கல்கி

# அன்பார்ந்த வாசகர்களுக்கு



வணக்கம்.

'மாதம் ஒரு மாவட்டம்' என்ற அடிப்படையில் ஒவ்வொரு மாவட்டமாகச் சென்று பார்க்கக் கல்கி தீர்மானித்தபோது அதில் வாசகர்களையும் ஈடுபடுத்த வேண்டும் என்று கருதி, தங்களுக்குள்ள குறைகளை மட்டுமின்றித் தங்கள் மாவட்டத்தில் அவர்கள் கண்ட சாதனைகளையும் எங்களுக்கு எழுதித் தெரிவிக்குமாறு வேண்டினோம். ஆனால் வந்த கடிதங்கள் எல்லாமே துயரங்களையும் குறைகளையும் தாங்கியனவாகவும் அநீதிகளைச் சுட்டிக்காட்டுவனவாகவுமே இருந்தன. இதற்கு என்ன பொருள்? மதுரை மாவட்டத்தில் சாதனைகளே நிகழவில்லை என்பதாக அர்த்தமில்லை. மக்களுக்கு உள்ள குறைகளும் துன்பங்களும் நடக்கின்ற அநீதிகளும் மலையாகக் குவிந்திருப்பதால் சாதனைகளைப் பற்றி அவர்கள் நினைத்துப் பார்க்கக் கூட முடியாதவர்களாக இருக்கிறார்கள் என்ற முடிவுக்குத்தான் வரவேண்டியிருக்கிறது.

ஏன் இந்த நிலை? சுதந்திரம் பெற்று முப்பத்தெட்டு ஆண்டுகளுக்கு மேலாகி விட்டன. இன்னமும் குடிநீர் இல்லை என்றும் மருத்துவ வசதி இல்லை என்றும் சாலை இல்லை, வேலை இல்லை என்றும் விலைவாசி உயர்வுக்கேற்ப வருவாய் இல்லை என்றும் கூக்குரல் ஏன் கிளம்புகிறது? ஏழு ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றிய பிறகும் நிலைமை இதுதான் என்றால் ஆட்சியாளருக்கு மட்டுமின்றி நாட்டின் குடிமகன் ஒவ்வொருவனுக்குமே அவமானமில்லையா?

நமக்குப் பின் சுதந்திரம் பெற்ற நாடுகளும் உலக யுத்தத்தின்போது அடியோடு அழிந்துபட்ட நாடுகளும் இன்று உலக அரங்கில் செல்வச் செழிப்புடன் கொடிகட்டிப் பறக்கின்றனவே. அவற்றிடம் என்ன இருக்கிறது? நம்மிடம் என்ன இல்லை? அந்நாடுகளைப் போலவே அல்லது அதைவிட அதிகமாக நம்மிடம் நீர் வளம், நில வளம், கனி வளம் எல்லாம் இருக்கிறது. மக்களிடம் உழைப்பார்வம் நிறையவே இருக்கிறது. நம்மிடம் இல்லாதது ஒன்றே ஒன்றுதான். அது மன வளம். தவறுகளைத் திருத்திக் கொள்கிற, மாற்றுக் கருத்துக்களை மதிக்கிற மனப் பக்குவம் நம்மிடம் இல்லை. சமூகச் சுயநலம் பெருகிவிட்டது. சுரண்டலும், லஞ்ச ஊழலும் திரும்பின பக்கமெல்லாம் தாண்டவமாடுகிறது. நாம் ஆட்சியில் அமர்த்திய அரசியல்வாதிகள் தங்கள் சொல்லாலும், செயலாலும் இவ்விஷயத்தில் மற்றவர்களுக்கும் வழி காட்டிவிட்டார்கள். எனவே ஊழல் புரிய வாய்ப்புள்ளவர்கள் கொழிக்கிறார்கள்; அதை அறியாத அப்பாவிகளும் விரும்பாத நேர்மையாளர்களும் தவிக்கிறார்கள்.

'நம் நாட்டின் நிலப்பரப்பு அதிகம். அதனால் பரவலாக அபிவிருத்தி இருந்தும் அதைக் கண்கூடாகப் பார்க்க முடியாமல் போகிறது; உருவாகும் செல்வத்தில் பங்கு கேட்க மக்கள்தொகை அதிகமாயிருப்பதால் செல்வச் செழிப்பு நம் கண்ணுக்குத் தெரியவில்லை' என்றெல்லாம் வாதாட முடியாது. நம் அளவுக்கு மக்கள் தொகைப் பெருக்கம் உள்ள வேறு நாடுகள் அம்மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதில் கணிசமான வெற்றி கண்டுள்ளன. எனவே எப்படிப் பார்த்தாலும் முப்பத்தெட்டு ஆண்டுகளாக ஆட்சியில் இருந்து வந்திருப்பவர்களின் கொள்கைகளும் திட்டங்களும் சரியில்லை என்ற முடிவுக்குத்தான் வரவேண்டியிருக்கிறது.

இந்த மாவட்ட இதழ்களின் நோக்கம் மக்களுக்கு உள்ள குறைகளை அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டு வருவது மட்டுமல்ல; மக்களுக்கு உள்ள குறைகள் முதலில் அவர்களுடைய சகோதர மக்களுக்கே தெரிய வர வேண்டும் என்பதும்தான். ஏனெனில் ஜனநாயகத்தில் மக்கள்தான் மன்னர்கள். அவர்களுக்கு நாட்டின் நிலவரம் முழுமையாகத் தெரிய வேண்டாமா? அப்படித் தெரிய வந்தால் தானே அவர்கள் சிந்தித்து நல்ல முடிவுகளை எடுக்க முடியும்! தலைமைக்கும் அதனை உணர்த்த முடியும்! அதற்குத்தான் இந்தத் திட்டம்.

அன்புடன்,

ஆசிரியர்.

# “எம்.ஜி.ஆரை என்னாலே பே
# முடியாது!”

பிப்ரவரி 26. புதன்கிழமை மாலை ஆறு மணி. கோபாலபுரம் கோலாகலபுரமாகக் காணப்படுகிறது. கலைஞர் வீட்டு மாடியில் அவருடைய அறையை அடைந்ததும் அவர் நேரத்தை அதிகம் எடுத்துக் கொள்ள விரும்பாமல் உடனடியாகப் பேட்டியைத் தொடங்குகிறோம்.

கல்கி: இந்த வெற்றியைத் தி. மு. க. எதிர்பாராத வெற்றி என்பதை விடவும் அ. இ. அ. தி. மு. க. எதிர்பாராத தோல்வி என்பது பொருத்தமாய் இருக்குமல்லவா.

கலைஞர் மு. கருணாநிதி: அவர்களுக்கு வேண்டுமானால் இது எதிர்பாராத தோல்வியாக இருக்கலாம். ஆனால் எங்களைப் பொறுத்தமட்டில் உறுதியுடன் பல சோதனைகளைத் தாங்கி, தோல்விகளைக் கண்டு கவலைப்படாமல் எப்படியும் தமிழ்நாட்டில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்த முடியும் என்ற நம்பிக்கையோடு பணியாற்றி வந்திருக்கிறோம். எனவே எங்களுக்கு இது எதிர்பார்த்த வெற்றிதான். எதிர்பார்த்ததைவிடச் சற்றுக் கூடுதலான வெற்றி என்று கூடச் சொல்லலாம்.

கல்கி: நகரங்களில் தி. மு. க. வுக்கு ஆதரவு பெருகியுள்ளது. ஆனால் கிராமப்புறங்களில் இன்னமும் அ. தி. மு. க. தான் செல்வாக்குப் பெற்றுள்ளது என்பதைத் தேர்தல் முடிவு உணர்த்துகிறது இல்லையா?

கலைஞர்: இல்லவே இல்லை. நகரசபைத் தலைவர் தேர்தல்களில் மட்டுமின்றி, ஊராட்சி ஒன்றியத் தலைவர் தேர்தல்களிலும் நகர பஞ்சாயத்துத் தலைவர் தேர்தல்களிலும் தி. மு. க. தான் அதிக இடங்களைப் பெற்று வருகிறது. தேர்தல் முடிவுகளை வேண்டுமென்றே தாமதப்படுத்தி அறிவிக்கிறார்கள். (கடைசியாகத் தமக்குக் கிடைத்த தகவல்களின்படி புள்ளி விவரங்களை எடுத்துக் கூறுகிறார்.)

கல்கி: கூட்டணி என்று பார்த்தால் அ. தி. மு. க. — இ. காங்கிரஸ் பெற்றுள்ள இடங்கள் உங்கள் கூட்டணியை விட அதிகம்தானே?

கலைஞர்: இந்தத் தேர்தலைப் பொறுத்தமட்டில் கூட்டணி என்பது தேர்தல் நடக்கும் வரையில்தான். அதன்பிறகு கூட்டணி என்பது அர்த்தமற்றதாகிறது. ஏனெனில் இந்தப் பஞ்சாயத்துத் தலைவர்களும் நகரசபைத் தலைவர்களும் தனித்தனியேதான் இயங்கப் போகிறார்களே தவிர கூட்டணியாக அல்ல. எனவே கூட்டணி வாதம் செல்லாது. அதிகமான இடங்களில் வெற்றிபெற்ற கட்சி தி. மு. க. தான். எனவே கிராமப்புறங்களிலும் விழிப்புணர்ச்சி ஏற்பட்டுள்ளது என்பதுதான் சரி.

கல்கி: விழிப்புணர்ச்சி என்று நீங்கள் சொல்வது மக்களுக்கு அ. தி. மு. க. ஆட்சி மீது ஏதோ ஒருவிதமான அதிருப்தி ஏற்பட்டிருக்கிறது என்கிற அர்த்தத்தில்தானே?

கலைஞர்: அடிமட்டத்திலிருந்து, மேல் மட்டம்வரை லஞ்சம் சட்டபூர்வமாய் ஆக்கப்பட்டுள்ளதையும், நிர்வாகம் சீர்கெட்டிருப்பதையும், மக்கள் உணர ஆரம்பித்திருக்கிறார்கள்.

கல்கி: அப்படியென்றால் அ. தி. மு. க. ஆட்சி மீதுள்ள அதிருப்தி காரணமான 'நெகடிவ் ஓட்டுகள்' தான் தி. மு. க. வுக்குக் கிடைத்திருக்கிறதேயொழிய, மக்கள் தாங்களாக முன்வந்து தி. மு. க. வுக்கு ஆதரவான வோட்டுக்களை அளிக்கவில்லை என்று சொல்லலாம் அல்லவா?

கலைஞர்: தி. மு. க. கட்டுக்கோப்புடைய ஒரு ஜனநாயக இயக்கம். அந்தத் தரப்புக் கூட்டணியில் உள்ள கட்சிகள் மாதிரி, இங்கே, நியமனங்கள் என்பது இல்லை. அடிமட்டத்தில் ஒன்றியம் முதல், படிப்படியாகத் தலைமைக் கழகம் வரை எல்லாமே ஜனநாயக அடிப்படையில்தான் செயல்படுகின்றன. இந்தப் பலமான விஷயம்தான் எங்கள் அஸ்திவாரம். வீட்டிலிருந்து ஓரிரு ஓடுகள் கீழே விழுந்து விட்டதால், ஒரேயடியாய் வீடே இடிந்து விட்டதாய்ச் சொல்லிவிடலாமா?

கல்கி: ஆர். எம். வீ. கோஷ்டி, ஜெயலலிதா கோஷ்டி இவற்றுக்கிடையிலான பூசல்கள் உங்களுக்கு எந்த அளவுக்கு உதவின?

கலைஞர்: அது எங்களுக்கு எந்த விதத்திலும் உதவவில்லை. இந்தக் கோஷ்டிகள் எல்லாம் உருவாகும் முன்பாகவே, — எம். ஜி. ஆர். நோய்வாய்ப்படுவதற்கும், இந்திரா காந்தி அம்மையார் சுட்டுக் கொல்லப்படுவதற்கும் முன்பாகவே — மயிலாடுதுறை, அண்ணாநகர் தொகுதிகளில் நாங்கள் வெற்றி பெற்றிருக்கிறோம். அவர்கள் ஒன்றாய் இருக்கும்போதுதான் மேலவையில் இடங்களை வென்றோம். எதிரிகளின் பலவீனத்தைவிட, எங்கள் பலத்தையே நாங்கள் நம்பியிருக்கிறோம்.

கல்கி: நாடாளுமன்றத் தேர்தல்கள் முடிந்ததும், ஹெக்டே ராஜினாமா செய்தாரே! அதுபோல் எம். ஜி. ஆரை ராஜினாமா செய்யச் சொல்லுவீர்களா?

கலைஞர்: அது எம். ஜி. ஆர். சிந்திக்க வேண்டிய விஷயம். நான் அப்படிச் செய்யச் சொல்கிறவன் இல்லை. அண்ணா எங்களை அப்படிப் பயிற்றுவிக்கவில்லை.

கல்கி: உள்ளாட்சித் தேர்தல்களைத் தள்ளி வைத்துக் கொண்டே போனதற்கு, முடிவுகள் தங்களுக்குச் சாதகமாய் அமையாது என்று



# புரிந்துகொள்ள

## -கலைஞர் பேட்டி

அ. தி. மு. க. எதிர்பார்த்தது ஒரு காரணமா?

கலைஞர்: கிராமப்புறங்களில் உள்ள டெண்ட் கொட்டகைகள், தேவாலயங்களாய்க் கருதப்படும் நிலையிலும் பஞ்சாயத்துத் தேர்தல் நடந்தால் தி. மு. க. வெற்றி பெறும் என்பது பற்றி எனக்குச் சந்தேகம் இருந்ததில்லை. அவர்கள் தேர்தலைத் தள்ளிப் போட்டுக்கொண்டே போனதற்குக்காரணம், 'வளர்ச்சித்திட்டங்களுக்கென்று ஒதுக்கப்படுகின்ற பணம், நகராட்சிகளால் அத்திட்டங்களுக்குப் பயன்படுத்தப்படாமல் கிணறுகள் வெட்டப்பட்டதாயும், ரோடுகள் போடப்பட்டதாயும் கணக்கெழுதப்பட்டு, அதிகாரிகள் 25 சதம் எடுத்துக் கொண்டு பாக்கியை மந்திரிகளுக்குக் கப்பம் கட்டி வந்தார்கள். கிராமமக்கள் இதைப்புரிந்துகொண்டும் விட்டார்கள். ஆங்காங்கே ஊராட்சி, நகராட்சி மன்றங்களுக்கு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டால், அவர்கள் எல்லாரும் இல்லாவிட்டாலும் கூட, நான்கு பேராவது 'ஏன் வளர்ச்சித் திட்டங்களுக்கு ஒதுக்கப்படும் பணம் சரியான முறையில் செலவு செய்யப்படுவதில்லை' என்று கேள்வி கேட்பார்கள். தேர்தல் நடத்தி விட்டால் கப்பம் வராது என்கிற எண்ணத்தில்தான் தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தார்கள்.

கல்கி: தி. மு. க. வெற்றி பெற்றுவிட்டதால் மாநகராட்சித் தேர்தலையும் உடனடியாய் நடத்த வேண்டும் என்று வற்புறுத்துவீர்களா?

கலைஞர்: நாங்கள் ஜெயித்துவிட்டோம் என்கிற 'கித்தாப்'பில் உடனே தேர்தல் வைக்கச் சொல்லி நாங்கள் வற்புறுத்தவில்லை. ஆனால் மாநகராட்சியில் மக்கள் பிரதிநிதிகள் இருக்க வேண்டியது அவசியம். எனவே அந்தத் தேர்தல்களும் கூடிய விரைவில் நடக்கத்தான் வேண்டும்.

கல்கி: இன்றைய நிலையை வைத்துப் பார்க்கும் போது தோல்வியைச் சந்திக்கப் பயந்து, அவர்கள் மாநகராட்சித் தேர்தலை ஒத்திப் போடுவார்களோ?

கலைஞர்: என்னை ஒரு திறமையான அரசியல்வாதி என்று பலர் சொல்வதுண்டு. ஆனால் எனக்குக் கூட எம். ஜி. ஆரைப் புரிந்து கொள்வது என்பது முடியாத காரியம் தான்.

கல்கி: பஞ்சாயத்துத் தலைவர்களாகவும் நகரசபைத் தலைவர்களாகவும் இப்போது தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள தி. மு. க. வினருக்குப் பொறுப்பு மிகவும் அதிகரித்திருக்கிறது. அவர்களுக்கு என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?

கலைஞர்: அவர்களை ஒரே இடத்தில் வரவழைத்துப் பேசுவதாக இருக்கிறேன். மக்களுக்கு வாக்களித்தபடி நேர்மையான, திறமையான நிர்வாகத்தை அளிப்போம். தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்கள் செயல்படுவதைத் தலைமைக் கழகம் கண்காணித்து வரும். தவறுகள் நடக்குமானால், தயவு தாட்சண்யமின்றி நடவடிக்கை எடுக்கத் தயங்க மாட்டோம். இதற்கு முன்னுதாரணங்கள் உண்டு. (சில எடுத்துக் காட்டுக்களைக் கூறுகிறார்.)

கல்கி: ப. உ. சண்முகம் எங்களுக்குத் தந்த பேட்டியில் ஊராட்சி, நகராட்சி மன்றங்களுக்கு அரசு சில புதிய அதிகாரங்களை வழங்கவிருப்பதாய்ச் சொன்னார். இப்போது தி. மு. க. அதிக இடங்களில் வெற்றி பெற்

திருப்பதால் அவற்றைக் கொடுக்காமல் இருந்து விடுவார்களோ?

கலைஞர்: அப்படிக் கொடுக்காமல் போனால், உங்களைப் போன்ற நடுநிலைப் பத்திரிகைகள் அதை எதிர்த்துக் குரல் கொடுக்க வேண்டும். நாங்கள் சட்டசபையில் போராடுவோம்.

கல்கி: தேர்ந்தெடுக்கப்பட்ட தி. மு. க. வினருக்கு அரசாங்கத்தின் முழு ஆதரவு கிடைக்கும் என்று நினைக்கிறீர்களா? ஊராட்சித் தலைவர்களை நீக்கக் கூட அரசுக்கு அதிகாரம் இருப்பதாய் ப. உ. ச. எங்களுக்குத் தந்த பேட்டியில் சொல்லியிருக்கிறாரே!

கலைஞர்: அரசாங்கத்துக்கு அதிகாரம் இருக்கலாம். ஆனால் அது துஷ்பிரயோகம் செய்யப்படும்போது... நீதிமன்றங்கள் இருக்கின்றன.

கல்கி: ஒவ்வொரு தடவையும் நீதிமன்றத்துக்குப் போய்க் கொண்டிருக்க முடியுமா?

கலைஞர்: நீக்கினால் மறுபடி மக்களிடம் தானே போக வேண்டும். மக்கள் பார்த்துக் கொள்வார்கள். சரியான மரபுகளைக் கடைப்பிடிப்பதென்றால் மாநில ஆட்சியில் ஒரு கட்சியும் நகரசபைகளில் வேறு கட்சியும் இருந்து செயல்படுவதில் சிரமம் இல்லை. முன்னர் காங்கிரஸ் ஆட்சியும் பின்னர் தி. மு. க. ஆட்சியும் மாற்றுக் கட்சி பதவியில் இருந்த நகரசபைகளுக்கு முழு ஒத்துழைப்புத் தந்துள்ளது.

கல்கி: அரசியல் கட்சி சார்பில்லாத விதத்தில் நகராட்சி, பஞ்சாயத்துத் தேர்தலை நடத்த நீங்கள் ஏன் ஒப்புக் கொள்ளவில்லை?

கலைஞர்: நாங்கள் ஒத்துழைக்கவில்லை என்பது தவறு. நகரசபைத் தேர்தல்களில் தலைவர்களுக்குக் கட்சிச் சின்னம் உண்டு, உறுப்பினர்களுக்கு இல்லை என்றார்கள். 'இதனால் குழப்பம் ஏற்படும். எல்லாருக்குமே கட்சிச் சின்னங்கள் ஒதுக்கிவிடலாம்' என்று கூறினேன்.

கல்கி: நகரசபைகளுக்கும் பஞ்சாயத்துக்களுக்கும் வருவாய் ஏதும் பிரமாதமாகக் கிடையாது. இந்நிலையில் புதிய தலைவர்கள் என்ன சாதித்துவிட முடியும்?

கலைஞர்: புதிய வரிகளை விதிக்காமல், பொதுமக்களை அதிகமாகப் பாதிக்காமல், வருவாயைப் பெருக்கிக் கொள்ள முயலலாம். வருவாயைப் பெருக்குவதைவிட இருக்கிற வருவாயைத் திறம்பட நிர்வகிப்பதுதான் முக்கியம்.

கல்கி: மன்றங்களின் கால அளவை நான்காண்டுகளிலிருந்து மூன்றாண்டுகளாகக் குறைத்திருக்கிறார்களே இதற்கு என்ன காரணம்?

கலைஞர்: வீணான குழப்பங்களை உண்டு பண்ணத்தான். மூன்று வருடங்களாய்க் குறைத்தால் யாராவது அதை எதிர்த்து வழக்குப் போட மாட்டார்களா? அதைக் காரணமாய் வைத்துத் தேர்தலையே தள்ளிப் போடலாமே என்றுதான்! நாங்கள், ''மூன்றென்ன இரண்டாக்கினாலும் பரவாயில்லை; தேர்தல் நடத்தினால் சரி!'' என்று கூறிவிட்டோம்!

கல்கி: நீங்கள் எல்லா ஊர்களுக்கும் போய்ப் பிரசாரம் செய்தீர்கள். எம். ஜி. ஆரால் போக முடியவில்லை. அதனால்தான் இந்த முடிவு. அவர் மட்டும் போயிருந்தால் முடிவுகள் மாறி இருக்கும் இல்லையா?

கலைஞர்: அவர் போகாவிட்டால் என்ன? இருபத்தைந்து மந்திரிகள் வேலை செய்திருக்கிறார்கள்; எம். ஜி. ஆர். பட வீடியோக்களை ஊருக்கு ஊர் காட்டினார்கள். ரேடியோவும், டெலிவிஷனும் அவர்களுக்காகவே இருக்கின்றன. நாங்கள் தரும் விளம்பரங்களில் 'எம். ஜி. ஆர்.' என்கிற வார்த்தை வந்தாலே, 'தனி நபர் விமரிசனம் — பிரசுரிக்க மாட்டோம்' என்று ஏற்க மறுத்த 'நடுநிலை' நாளிதழ்கள் சவால் விளம்பரத்தை இரண்டு பக்கம் பிரசுரித்தன! இன்னும் என்ன வேண்டும்?

கல்கி: இதுவரை இல்லாமல் ஒரு திடீர் மாற்றம் இந்தத் தேர்தலில் ஏற்படுவதற்கான அடிப்படைக் காரணம் என்ன?

கலைஞர்: சென்ற பொதுத் தேர்தலிலேயே இந்தத் திருப்பம் ஏற்பட்டிருக்க வேண்டும். இந்திரா காந்தி அம்மையாரின் கொலை, எம். ஜி. ஆரின் உடல்நலக் குறைவு இவை காரணமாய் ஏற்பட்ட அனுதாப அலை இதைச் சில காலம் தள்ளிப் போட்டுவிட்டது.

கல்கி: செல்வாக்குள்ள கட்சியுடன் உறவாடுவதையே காங்கிரஸ் கட்சி தமிழகத்தில் செய்து வருகிறது என்பது சரித்திரம். இந்தத் தேர்தல் வெற்றியினால் இ. காங்கிரஸும் தி. மு. க. வும் கூட்டுச் சேருகிற வாய்ப்பு இருக்கிறதா?

கலைஞர்: கடந்த கால அனுபவம் அத்தகைய ஓர் அறிவுரையை எதிர்காலத்தில் எங்களுக்கு நிச்சயம் வழங்காது.

கல்கி: கடைசியாய் ஒரு கேள்வி! நீங்கள் ஏன் எம். ஜி. ஆரைப் போய்ப் பார்க்கவே இல்லை?

கலைஞர்: அப்போலோவில் இருக்கும்போது இரண்டு தடவை போனேன். அவர் இருந்த மாடிப் பக்கமே என்னை விடவில்லை. அமெரிக்கா போன போது கடிதம் எழுதினேன். பதில் இல்லை. நான் எம். ஜி. ஆர். உடல் நலக்குறைவுற்ற போது உருக்கமாய் முரசொலியில் எழுதியதை நீங்கள் படித்திருப்பீர்களே! எம். ஜி. ஆர். அமெரிக்காவிலிருந்து திரும்பிய அன்றைக்கு நடத்தப்பட்ட வரவேற்புக்கு அழைப்பிதழ் வந்தது. வி. ஐ. பி. பாஸ் கூட இல்லை. எங்கோ ஓர் ஓரத்தில் இடம் ஒதுக்கியிருந்தார்கள். நான் போகவில்லை. குணமடைந்து திரும்பியதற்கு வாழ்த்திவிட்டு, சந்திக்கவிருப்பம் தெரிவித்து, தேதி, நேரம் கேட்டு ஒரு கடிதம் எழுதினேன். அதற்கு எம். ஜி. ஆரிடமிருந்து இன்று வரை பதில் இல்லை. 'எம். ஜி. ஆருக்குக் கடிதம் எழுதியிருந்தீர்கள். உங்கள் பெருந்தன்மைக்குப் பாராட்டுக்கள்' என்று பாக்யராஜிடமிருந்துதான் ஒரு கடிதம் வந்தது!

படம்: மகே.



# அடுத்த முறை,
# ஸன்ஃப்ளவர்
# பாதுகாப்பு கவசம் மூலம் உங்கள் குடும்பத்தைக் காத்திடுங்கள்.







## ஸன்ஃப்ளவர் இகானமி பேக். நீங்கள் இழப்பதோ சில சில்லறை காசுகளும் சில்லறை வனஸ்பதியும். பெறுவதோ அதி தூய்மை.

உங்கள் குடும்பத்திற்கு, முற்றிலும் பாதுகாப்பானதையும், தூய்மையானதையும் கொடுங்கள்: ஸன்ஃப்ளவர் ப்ராண்ட் வனஸ்பதி, விட்டமின் A மற்றும் D செறிந்த, ஊட்டமிக்க, ஆரோக்கியமான வனஸ்பதி உங்களுக்குக் கிடைக்க, ஸன்ஃப்ளவர் பாதுகாப்பு கவசத்தால் ஸீல் செய்யப்பட்டு, பேக் செய்யப்பட்டு வருகிறது.








# ஸன்ஃப்ளவர்
ப்ராண்ட் வனஸ்பதி

இதை விடச் சிறந்தது தூய நெய் மட்டுமே.

கிலோ மற்றும் ½ கிலோ பேக்குகளில் கிடைக்கிறது.

WIPRO LTD – *Closer to the consumer*

# ஓர்...

**ரா**ஜகோபாலன் பெருமூச்சுவிட்டார்.

ஒரு பத்திரிகை பாக்கியில்லாமல் அனுப்பிப் பார்த்தாகிவிட்டது. அத்தனையும் முனை பிசகாமலல்லவா திரும்பி வந்துவிட்டன. இந்தப் பத்திரிகைகளில் பிரசுரமாகிற அளவுக்கு என் கதைகளுக்குத் தகுதியில்லையா? இல்லையில்லை! என் கதைகளைப் பிரசுரிக்கிற தகுதிதான் இந்தப் பத்திரிகைகளுக்கு இல்லை!

நினைத்து நினைத்து ராஜகோபாலன் பொருமினார். பத்திரிகை அலுவலகங்களிலிருந்து திரும்பி வந்து கட்டுக்கட்டாய்.... அடுக்கி வைக்கக்கூட இடமில்லாமல் வீட்டு மூலைகளிலும், காலி டின்களிலும் அடைக்கலம் புகுந்துவிட்ட தனது படைப்புக்களையெல்லாம் வெளியிலெடுத்து, நோஞ்சான் குழந்தையைப் பார்த்துப் பார்த்து மனம் வெதும்பித் துடிக்கும் ஒரு தாயைப் போலக் குலுங்கினார்.

இன்னொரு மூலையில், திரும்பி வந்த தனது கதைகளைப் போலவே எந்தவிதச் சலனமுமில்லாமல் எங்கோ வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த மனைவி ஜனகத்தைப் பார்த்தார்.

கடந்த மூன்றாண்டு காலமாகவே அவள் அப்படித்தான் எங்காவது வெறித்தபார்வையில்லயித்துக் கொண்டிருக்கிறாள். அவள் தனது அக்காள்மகன் திருமணத்திற்குச் செல்லும் வரை அப்படியில்லை. அவர் தமிழாசிரியராகஓய்வுபெறுவதற்கு முன்பெல்லாம், ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு புதுப் பாத்திரத்தை வாங்கி வந்து, 'இது கிரிஜாவுக்கு, இது அடுத்தவள் ரேவதிக்கு, இது....?' என்று ஒவ்வொன்றையும் பத்திரமாய்ப் பரண்மேல் அடுக்கி அடுக்கி அழகு பார்த்துக் கொண்டுதான் இருந்தாள் ஜனகம். மூத்தவள் கிரிஜாவுக்கு ஓர் அரைப் பவுனில் தோடுவாங்கிப்போடக்கூட குடும்பப் பொருளாதாரம் இடம் கொடுக்காத போதும், 'என் குழந்தைகளுக்கென்ன... அத்தனையும் சொக்கத் தங்கங்கள்! அவர்களைக் கைப்பிடிக்கும் பிள்ளைகளுக்குத்தான் கொடுத்து வைத்திருக்க வேண்டும். நேரமும் காலமும் கூடி வரும்போது கடவுள் ஒரு வழி காட்டாமலா போய்விடுவார்' என்று தன் மனத்தைத்தானே சமாதானப்படுத்திக் கொண்டு சந்தோஷப்பட்டவள்தான்

ஆனால்.... அவர் ஓய்வு பெற்ற பிறகு, ஒருமுறை, தன் அக்காள் மகன் திருமணத்திற்காகச் சென்னை சென்றுவிட்டு மதுரைக்குத் திரும்பி வந்தபோதுதான் அப்படியொரு மனமாற்றத்தோடும், வெறித்த பார்வையோடும் அவள் திரும்பி வந்தாள்.

"என்ன ஜனகம், ஒரு மாதிரியிருக்கே! உடம்புக்கு என்ன?" என்று அவர் விசா

ரித்தபோது அவள் விசித்து, விசித்து அழ ஆரம்பித்துவிட்டாள்.

பதறிப் போன அவர், ''ஜனகம் என்ன வந்தது உனக்கு? ஏன் அழறே? சொல்லும்மா....'' என்று அவள் தோள்களை லேசாக அணைத்தபடி கூந்தலை ஆதுரமாகத் தடவிக் கொடுத்தபோது அவள் கேட்டாள்...

''ஏன்னு, நம் குழந்தைகளுக்கு வரனே குதிராதா?''

''ஏம்மா அப்படிக் கேட்கறே? நீ தினமும் வணங்குகிற முருகனிடம் நம்பிக்கை இழந்துட்டியா? நம் குழந்தைகளுக்கெல்லாம் ஒரு வழி காட்டாமலா போய்விடுவான்? நீ பேசாம இரு. எல்லாம் தானா நடக்கும்....''

''அப்படி இல்லன்னா. நான் மெட்ராஸுக்குப் போயிருந்தபோது சில பேர் என்னவெல்லாம்பேசினா தெரியுமா?' அஞ்சு பெண்களைப் பெத்தா அரசனே ஆண்டியாவான்னு சொல்லுவாங்க. இவளோ ஆறைப் பெத்து வெச்சிருக்கா. எது காதிலேயும் மருந்துக்குக் கூடத் தங்கமில்லே. என்னத்தை வாரிக்



* ரேவதி.

# இந்தியக் குடும்பத்தின் உண்மைக் கதை

ஒருவேளை இது உங்கள் வீட்டுக் கதையாகவும் இருக்கக் கூடும்....

கொடுத்திடப் போறு? எவன் வந்து 'ஏமாந்து போவான்?' னு கேலி பேசினு.... அதைத் தான்னு என்னாலே தாங்கிக்க முடியலே...''

''அசடு, அசடு! வம்பு பேசறவா பேசட்டுமே! வெறும் பொன்னுக்கும் பொருளுக்கும் ஆசைப்படறதுக்கா குழந்தைகளைத் தாரை வார்த்துக் கொடுக்க முடியும்? அப்படிக் கொடுத்தால்தான் அவை சந்தோஷமாய் வாழ்ந்திடும்னு நினைச்சுட முடியுமோ? சந்தோஷம்கறது காசு பணத்தில் இல்லே ஜனகம். அது இரண்டு மனங்களின் இணைப்பிலே மட்டும்தான் பிரவாகமாய்ப் பொங்கறது.....

''உதாரணத்திற்கு நம்மையே எடுத்துக்குவோம். நான் உனக்குன்னு என்ன வாங்கிக் குடுத்திருக்கேன்? தமிழாசிரியரா வேலை பார்த்தப்பக்கூட உனக்கொரு பட்டுப்புடவை வாங்கித் தர முடிஞ்சுதா என்னால்? தங்க நகைன்னு ஒரு மூக்குத்தியாவது வாங்கிப் போட்டிருக்கேனா உனக்கு? ஆனாலும் நாம் சந்தோஷமாத்தானே இருக்கிறோம். அந்தப்

* ஜனகம்.



பூரண சந்தோஷத்தின் வெளிப்பாடுகள் தானே நம்முடைய.இரண்டு பையன்களும், ஆறு பெண்களும். அதுகள் கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் படிப்பதற்காக நாம் இரண்டு பேரும் எத்தனை முழு நாட்கள் பட்டினியா இருேம். ஆனல் அந்த முழுப் பட்டினிகளால் ஒருமுறையாவது ஒரு கணமாவது நம் சந்தோஷத்தைத் தடுக்க முடிஞ்சுதா ஜனகம்? எந்தத் துயரமும் சந்தோஷமாகும் வித்தை இரண்டு மனங்களின் தீண்டுதலில்தான் இருக்கிறது. அப்படிப்பட்ட மனமுடையவர்களுக்காகத்தான் நம் பெண்கள் காத்திருக்கிருர்கள். கவலைப்படாதே!'' என்ற கணவனின் ஆறுதலான வார்த்தைகளால் அப்போது ஜனகம் அமைதியடைந்தாளென்றலும் அது அவளிடம் நீண்ட நாட்கள் நிலைக்கவில்லை.

கணவன் சொன்னதுபோல் எந்த வரனும், மனங்களின் தீண்டுதலில் சிலிர்த்து ஆனந்திக்கத் துடிக்கும் வரனய் வரவில்லை. 'பத்து பவுனவது போட முடியுமா? நாங்களென்ன மற்றவர்களைப் போல் ஆனையைக் கொடு; குதிரையைக் கொடு என்ரு கேட்கிறேம்? பெண் பாந்தமாகத் தெரிவதற்காகப் பத்தே பத்துப் பவுன் நகையும், பையன் அங்கும் இங்கும் போய்வர — அதுவும் உங்கள் பெண்ணைக் கூட்டிக் கொண்டு போய் வர.... ஒரு ஸ்கூட்டராவது வேண்டாமா என்று தானேகேட்கிறேம்.இதுகூடச்செய்யலைன்ன எப்படி?' என்றுதான் கேட்டார்கள்.

மனமுடைந்துபோனள்ஜனகம். கணவன் ஓய்வு பெற்றபோது கிடைத்த கிராஜுவிடி பணம், மூத்தவள் கிரிஜாவும், அடுத்தவள் ரேவதியும் பட்டப்படிப்புப் படிப்பதற்காக வாங்கிய கடனை அடைப்பதற்கே சரியாய்ப் போனது. பிறகு மாதாமாதம் வருகிற பென்ஷன் தொகையான நானூற்றைம்பது ரூபாயில்தான் நூறு ரூபாய் வீட்டு வாடகை கொடுத்து..... மீதமுள்ளதில் பத்துப் பேரும்

* ராஜகோபாலன்.



அரை வயிறு கால் வயிருகக் காலம் கடத்திக் கொண்டிருக்கிருர்கள். இதில் வரதட்சணைக்கு எங்கே போவது? இந்த நினைவே இன்றைக்குக் ஜனகத்தைச் சலனமில்லாமல் வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கும் ஒரு மன நிலைக்குக் கொண்டு வந்துவிட்டது.

— இப்படிக் கடந்த காலத்தை நினைத்துக் கலங்கிக் கொண்டிருந்த ராஜகோபாலனை, ''எனக்குக் காப்பி மட்டும் போறுது. சாதம் போடு, பசிக்கறது....'' என்று சமையல் கட்டில் அடம்பிடித்துக்கொண்டிருந்த கடைக்குட்டியான பத்து வயது காயத்ரியின் குரல் தான் யதார்த்த நிலைக்குக் கொண்டு வந்தது.

''மத்தியானம் ஸ்கூல் முடிஞ்சதும் லஞ்ச் டய்த்திலே வந்து சாதம் சாப்பிட்டுட்டுப் போம்மா. இப்போ ஏது சாதம்? அடம் பிடிக்காதே. ரொம்பப் பசிக்கறதுன்ன சொல்லு. பாலில்லாமல் கொஞ்சம் காப்பி போட்டுத் தர்றேன். குடிச்சிட்டுப் போ...'' என்று மூத்தவள் கிரிஜா சமாதானப்படுத்திக் கொண்டிருந்தாள்.

அதைக் கேட்டுக் கொண்டிருந்த ராஜகோபாலனுக்கு மறுபடியும் துக்கம் வந்து நெஞ்சை அடைத்தது. தான் பெற்றெடுத்த குழந்தைகளுக்குச் சாதம் போட்டு ஸ்கூலுக்கு அனுப்பி வைக்கக்கூட முடியாத இயலாமை அவரைச் சுட்டது.

அவர் ஓய்வு பெற்ற 80ம் ஆண்டுக்குப் பிறகு அவர்கள் எப்போதுதான் மூன்று வேளை சாப்பிட்டார்கள்? குறைந்தபட்சம் இரண்டு வேளை சமைத்ததாகச் சொல்வதற்குக்கூட ஒரு நாளைக் குறிப்பிட முடியாது. மத்தியானம் ஒரு வேளை சமைப்பதோடு சரி. அதுவும் ரசம் வைத்த அன்று அதுதான் எல்லாம். குழம்பு வைத்த அன்று ரசம் கிடையாது. தொட்டுக் கொள்ளக் கறிகாய் என்பதெல்லாம் கனவுகளாய்ப் பறந்து போய் மூன்றுண்டுகளாகிவிட்டன.

பாவம் குழந்தைகள்! மத்தியானம் மட்டும் தான் கொஞ்சம் வயிருரச் சாப்பிடுகிருர்கள். இரவுக்கு மத்தியானம் சாப்பிட்டதில் ஏதாவது மீதி இருந்தால்தான் உண்டு. இல்லையென்ருல் இல்லைதான். காலையில் வெறும் காப்பியோடு சரி. பசித்தால் வெறும் பச்சைத் தண்ணீரைக் குடித்துவிட்டு மதியம் சமைக்கும்வரை காத்திருப்பதைத் தவிர வேறு வழியே இல்லை.

சரிவரச் சாப்பிட முடியாததாலேயே குழந்தைகளின் உடலிலுள்ள எதிர்ப்புச் சக்தி குறைந்து போய் அடிக்கடி நோய் வர ஆரம்பித்துவிட்டது. அப்படித்தான் ஒருமுறை இரண்டாவது பெண் ரேவதி ஜுரம் வந்து படுத்தாள். பிறகு அந்த ஜுரம் வலிப்பு நோயில் போய்த்தான் முடிவடைந்தது.

முன்பெல்லாம், பி.ஏ. ஆங்கில இலக்கியம் படித்த ரேவதியின் நுனி நாக்கில் அந்த ஆங்கிலம்தான் எப்படியெல்லாம் விளையாடும்! ஷேக்ஸ்பியரின் பல நாடகக் காட்சிகள் அவளுக்கு ஸ்லோகங்கள் மாதிரி அத்துப்படி. சில சமயங்களில் அந்தந்தப் பாத்திரங்

# சக்தி பாதுகாப்புப் பெட்டகங்கள் வாடகையின்றி வழங்கும் லாக்கர்கள்

எங்களிடம் நேரிடையாக டெபாசிட் செய்யும் வாடிக்கை யாளர்களுக்கு ஒரு வருஷத்திற்கு வாடகையின்றி உரிய லாக்கர்கள் ஒதுக்கப்படும். இந்த வசதி கீழ்க்கண்ட எமது கிளை அலுவலகங்களில் உண்டு:

* 76, தியாகராயா சாலை, தி. நகர்,
  சென்னை-600 017.
  தொலைபேசி : 440641, 444459.
* F-47, முதல் மெயின் ரோடு,
  அண்ணாநகர் கிழக்கு, சென்னை-600 102.
* பாரதீய வித்யா பவன் கட்டிடம்,
  டி.பி. ரோடு. ஆர். எஸ். புரம்,
  கோயம்புத்தூர்.

உங்கள் வசதிக்காக எமது அலுவல் நேரங்கள்
காலை 9 முதல் மாலை 7 மணி வரை
ஞாயிறு காலை 10 முதல் பிற்பகல் 1 மணி வரை

SAKTHI SAFE VAULTS



## சக்தி பைனான்ஸ் லிமிடெட்

பதிவு அலுவலகம் : 475, டாக்டர் நஞ்சப்பா சாலை,
கோயம்புத்தூர்-641 018. தொலைபேசி: 32240

*உங்கள் நலனே எங்கள் நலன் உங்கள் பொருட்களை எங்கள் பாதுகாப்பில் தந்து நிம்மதி பெறுங்கள்.*

MPC SF/2/86

## புதிய பிரச்சினைகள்!



'இந்தாருங்கள்!
சமுதாயப் பிரச்னைகளை
மையமாக வைத்து
நான் எழுதிய
நாவல் இரண்டு'
என்றார்
என் நண்பர்!
இரு புதிய பிரச்னைகளுடன்
சமுதாயம் கனத்தது!

— மதிவண்ணன்.

களின் உணர்ச்சி பாவத்தோடு அவள் பேசிக் காட்டும்போது யாருக்குத்தான் ரசிக்கத் தோன்றாது!' ஆனால் இப்போது? எல்லாம் போயிற்று. வலிப்பு நோயின் தாக்கத்தில் அவள் ஒவ்வொரு நாளும் இளைத்துக் கூடாகிக் கொண்டே போகிறாள்.... பட்டுப்பூச்சி போல் பறந்து திரிந்து கொண்டிருந்த அந்தப் பழைய ரேவதிதானா இவள்? இருபத்தைந்து வயதிலேயே அறுபது வயது முதுமையின் ரேகைகளல்லவா அவள் முகத்தை கபளீகரம் செய்யப் பார்க்கின்றன!

மூன்றாமவள் ராதாலக்ஷ்மியை எஸ்.எஸ்.எல்.சி.க்கு மேல் படிக்கவைக்க முடியவில்லை. சொல்லப் போனால் அவளை டைப்ரைட்டிங் கிளாஸுக்கு அனுப்பக்கூட வசதியில்லாததால் வீட்டில்தான் இருக்கிறாள்.

நான்காவது குழந்தையாகப் பிறந்தவன்தான் வெங்கட கிருஷ்ணன். பிளஸ் டூ முடித்துவிட்டு டி.வி.எஸ். கம்பெனியின் உதவியோடு தபால் மூலம் பி. காம். படித்துக் கொண்டிருக்கிறான். அவன்தான் அந்தக் குடும்பத்தில் தந்தைக்கு அடுத்த ஆண்பிள்ளை. அவனாவது மூன்று வேளையும் சாப்பிட்டுப் படித்து பட்டம் பெற்று வேலையில் சேர்ந்து இந்தக் குடும்பத்தைக் காப்பாற்றும் நிலைக்கு வர வேண்டாமா? அதற்காகவே – குறைந்த பட்சம் மூன்று வேளையும் வயிறாரச் சாப்பிட்டு உடல் நலத்துடனாவது இருப்பான் என்ற ஒரு காரணத்துக்காகவே – அவனை மதுரையிலுள்ள மாடர்ன் ஹோட்டலில் பில் போடும் வேலையில் சேர்த்திருக்கிறார் ராஜகோபாலன். அந்த ஹோட்டலில் அவனுக்காகக் கொடுக்கப்படும் மாதம் நூறு ரூபாய்ச் சம்பளமும் குடும்பத்துக்கு மிகவும் உதவிகரமாய் இருக்கிறது.

ஐந்தாவதாகப் பிறந்த சாந்தி பத்தாவது முடித்துவிட்டாள். பிளஸ் டூ படிக்க வசதியில்லை என்பதால் டைப்ரைட்டிங் போய்க் கொண்டிருக்கிறாள். ஷார்ட் ஹேண்ட் படிக்கவும் அவளுக்கு ஆசைதான். ஆனால் அதற்கு மாதா மாதம் ஃபீஸ் கட்டப் பணம் வேண்டாமா?

ஆறாவதாகப் பிறந்த லக்ஷ்மி நாராயணி, அடுத்தவர்களான குமரன், காயத்ரி ஆகியோரும் கஷ்டத்தோடு கஷ்டமாகப் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

ஆனாலும் இவர்களுடைய எதிர்காலம் என்ன? தந்தையென்ற முறையில் அவர்களுடைய எதிர்காலத்தை ராஜகோபாலனால் நிர்ணயம் செய்ய முடியுமா? எப்படி முடியும்?

மூத்தவள் கிரிஜாவுக்கு இப்போதே இருபத்தொன்பது வயதாகிவிட்டது. ஒரு நர்ஸரிப் பள்ளியில் மாதம் நூறு ரூபாய்ச் சம்பளத்தில் வேலை செய்து கொண்டிருக்கிறாள். அவளுக்கென்று ஓர் எதிர்காலத்தை எப்படி அமைத்துக் கொடுப்பது?

எப்படியாவது குழந்தைகளை நல்லபடியாகக் கரைசேர்த்துவிட வேண்டும் என்ற ஆர்வத்தில்தான் சுயவேலைவாய்ப்புத்திட்டத்தின் கீழ் மக்கடை வைப்பதற்காக மூத்தவள் பெயரில் பேங்கில் கடன் வாங்கித் திருப்பரங்குன்றத்தில் மக்கடை வைத்தும் பார்த்தாகிவிட்டது. ஆனால் அவரால் பணம் சம்பாதிக்கும் ஒரு வியாபாரியாக உருமாற முடியவில்லை. சில மாதங்களிலேயே மேற்கொண்டு சரக்கு வாங்கி வியாபாரத்தைத் தொடர முடியாத அளவுக்கு நசித்து போய்விட்டது. இருந்தாலும் வாங்கிய கடனைத் தராமல் ஏமாற்றுவது தருமமாகுமோ? வியாபாரத்தை இழுத்து மூடிவிட்டாலும் மாதா மாதம் ஐம்பது ரூபாய் கட்டிக் கடனையும் அடைக்க வேண்டிய கட்டாயம்!

டாக்டர்களெல்லாம் சொல்லுகிறார்கள்..... சரியான மருந்து மாத்திரைகளும், போஷாக்கு உணவும் கொடுத்து வந்தால் மனைவியின் உடல் நலனும், ரேவதியின் உடல் நலனும் நாளுக்கு நாள் தேறி வர வாய்ப்புண்டு என்று. ஆனால் அதற்கெல்லாம் எங்கே போவது?

ரேவதிக்கு வலிப்பு வராமலிருப்பதற்காகத் தினமும் கொடுக்கப்படும் மாத்திரை (Eptoin) பாட்டில் நேற்றே காலியாகிவிட்டது. நூறு மாத்திரைகள் கொண்ட அந்தப் பாட்டிலை வாங்க வேண்டுமென்றால் மொத்தமாகப் பதின்மூன்றரை ரூபாய் வேண்டும். பென்ஷன் பணம் வருவதற்கோ இன்னும் பதினைந்து நாட்கள் இருக்கின்றன. என்ன செய்வது? மாத்திரை இல்லாவிட்டால் இன்று இரவில் அவளுக்கு வரப் போகும் வலிப்பின் கொடுமையை யாரால்தான் தாங்கிக் கொள்ள முடியும்?

கிழக்குச் சித்திரை வீதியிலுள்ள அனுமார் கோயிலுக்குச் சென்று, அங்கு வரும் பக்தர்களுக்குத் தீர்த்தம் கொடுத்துக் கொண்டிருந்தாலாவது ஒரு ரூபாயோ இரண்டு ரூபாயோ வருமானம் கிடைக்கும். அதில் ஒரு பத்து மாத்திரைகளாவது வாங்கிக் கொண்டு வரலாம் என்ற எண்ணத்தில் தனது கதைக் குவியல்களை விலக்கிக் கொண்டு எழுந்து, கிழிந்து போன மேல் துண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு புறப்பட்டார் ராஜகோபாலன். காலை ஆகாரமாக வழக்கமாகக் குடிக்கும் காப்பியைக் கூட அன்று அவர் குடிக்கவில்லை.

— இளங்கோவன்.

படங்கள்: மணி.


எரிபொருள்
அபரிமிதமான
விலை உயர்வு
மியாவ்
மியாவ்


சூடு கண்டு நீ பட்ட
அவஸ்தை எனக்கு
வேண்டாம்!
மிதமான
ரயில் கட்டண
உயர்வு →


சமத்துக் கண்ணு!
நல்லபடியா
இருந்துக்கணும்!


ஒரு மாசம் கெடு!
அதுக்குள்ளே உன்
வாலைச் சுருட்டிக்
கணும்!

Zuma


நாற்காலிக்கு
ஒண்ணும்
ஆபத்தில்லை!
காளிமுத்து
பஞ்சாயத்துத்
தேர்தல்
சூறாவளி



கல்கி

1986 மார்ச் 9
மலர் 44 இதழ் 32
குரோதன மாசி 25



# அன்பே அழகென்று வாழ்ந்தவர்!

அமரர் கல்கி அவர்கள் சிவகாமியின் சபதத்தை எழுதிய பிறகுதான் தமிழ் நாட்டிலும் அதற்கு வெளியேயும் பல்லாயிரக்கணக்கான தாய்மார்களுக்குத் தங்கள் குழந்தைகள் பரத நாட்டியம் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வமும் ஆசையும் ஏற்பட்டது. அதற்குச் சில காலம் முன்பு வரை பரத நாட்டியம் என்பது ஏதோ கேவலமான விஷயம்; அதை மோசமான நடத்தை உள்ளவர்கள்தான் பயில்வார்கள் என்றுதான் பலரும் கருதினார்கள். கல்கி, டி. கே. சி. ஈ. கிருஷ்ணய்யர் போன்ற சிலர்தான் அது புராதனக் கலை மட்டுமல்ல, தெய்வீகமான கலை என்பதை உணர்ந்து மக்களுக்கும் எடுத்துச் சொன்னார்கள். தேவதாசிகளிடமிருந்து பரதக் கலையை மீட்டு அதற்குக் கௌரவமும் உயர் அந்தஸ்தும் அளித்தவர்களுள் ருக்மிணி தேவி மிக முக்கியமானவர். பிராமண குலத்தில் பிறந்த அவர் பரதக் கலை பயின்றது மட்டுமல்ல, ஓர் ஆங்கிலேயரையும் மணந்து பெரிய பரபரப்பை ஏற்படுத்தினார். பரபரப்பு சற்று அடங்கியதும் ருக்மிணி தேவி ஒரு மிக உன்னதமான கலையின் மறுமலர்ச்சிக்கு வித்திட்டிருக்கிறார் என்பதும் மகத்தான சமுதாய மாற்றங்களுக்கு அச்சமின்றி அடிகோலியிருக்கிறார் என்பதும் புரிந்தது. பெண்கள் ஆண்களின் அடிமைகள் அல்ல என்பதும் அவர்களுக்குச் சுதந்திர சிந்தனையும், செயல் திறனும் உண்டு என்பதும் சம உரிமைகள் தரப்படவேண்டும் என்பதும் ஜாதி மதக் கட்டுப்பாடுகள் தகர்க்கப்பட வேண்டும் என்பதும் மனித இனம் ஒன்றே என்பதும் ஒரு மின் தாக்குதலாக அனைவராலும் உணரப்பட்டது. மாமல்லபுரத்தை டி.கே.சி.யுடன் பார்த்தபோது கல்கியின் உள்ளத்தில் ஆயனர் உருவானார் என்றால் ருக்மிணி தேவியின் நடனத்தை ரசித்தபோது சிவகாமி தோன்றினாள்!

பரத நாட்டியம் ஆடுவதில் ஆரம்பித்த ருக்மிணி தேவி தான் பெற்ற இன்பத்தைப் பிறருக்கும் அளிக்கக் கருதி கலாக்ஷேத்திரத்தைத் தொடங்கினார். அது ஒரு பெரிய கலைக் கூடமாகவும் கல்விக் கூடமாகவும் வளர்ந்து இன்று ஒரு பல்கலைக் கழகத்தின் அந்தஸ்தைக் கூடப் பெறும் தகுதி படைத்ததாகிவிட்டது! இங்கு பரத நாட்டியம், கதக்களி, கர்நாடக சங்கீதம் போன்ற பல கலைகள் போதிக்கப்பட்டாலும் கலாக்ஷேத்ரா அரங்கேற்றிய நாட்டிய நாடகங்கள் ருக்மிணி தேவியின் முத்திரையோடு 'கலாக்ஷேத்ரபாணி' எனத் தனித் தன்மை பெற்று உலகப் புகழ் பெற்றுவிட்டன.

இங்கு வந்து சேர்ந்து இசையும் நடனமும் போதித்த கலைஞர்கள் பணத்துக்காக வரவில்லை. ருக்மிணி தேவியின் கலா ரசனையும் அவரது அன்புமே அவர்களை ஈர்த்தன. இத்தனை கலை மேதைகளை வேறு எந்த ஒரு நிறுவனமும் பெற்றதில்லை என்று கூறுமளவில் கலை மேதைகள் அங்கு கூடி வாழ்ந்து மகிழ்ந்தார்கள்.

ருக்மிணி தேவியின் அன்பு கலைக்கும் கலைஞர்களுக்கும் மட்டும் கிட்டிய ஒன்றல்ல. அந்த அன்பு சர்வ வியாபகமானது. மிருகங்கள், பறவைகளிடம் அவர் காட்டிய அன்பு, பிராணிகள் நலன் சங்கமாகவும் மரக்கறி உணவு இயக்கமாகவும் வளர்ந்தது. அழகுணர்ச்சி என்பது அன்பின் ஒரு வடிவமே என்று கருதிய அவர் அழகுணர்ச்சியையே தமது வாழ்க்கையாக்கிக் காட்டினார். மண் சட்டியின் வனப்பிலிருந்து விண்வெளியின் எழில்கள்வரை பார்த்துப் பார்த்து அனுபவித்தார். மற்றவர்களுக்கும் எடுத்துச் சொன்னார். இளமையில் அவரது நடனத்தில் கண்ட அர்த்தமுள்ள அழகுகளை முதுமையில் அவரது இனிய குரலில் ஒலித்த பொருள் பொதிந்த சொற்பொழிவுகளில் அனுபவித்தோம்; தலைநகரில் ராஜ்ய சபை உறுப்பினர்களும் கேட்டு ரசித்தார்கள்.

நமது நாட்டின் ஜனாதிபதிப் பதவியை ருக்மிணி தேவி வகிக்க வேண்டும் என்று மொரார்ஜி தேசாய் விரும்பினார். சாக்கடை அரசியல் அதை அனுமதிக்கவில்லை. அனுமதிக்காததே நல்லதாயிற்று என்றும் கூறலாம். ஆனால் அதே நேரத்தில் ஓர் அழகான, கற்பனையான லட்சிய ஜனநாயகத்துக்கு ஏற்ற லட்சணமான ஜனாதிபதி ஒருவரைக் குறிப்பிட வேண்டும் என்றால் ருக்மிணி தேவி என்ற பெயரைத்தான் சொல்லமுடியும்!

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்.

# ஓர் ஊரையே வரண்டு போகச் செய்த ஆளுங்கட்சி எம்.எல்.ஏ.



வேப்பம்பட்டியில் கால்வாய் பிரியும் இடம்.

"பாருங்க சார் என்னுடைய வயலே!" என்றார் சென்றாராம். பாதி வளர்ந்த நிலையில் பரிதாகமாகக் காய்ந்து கிடந்தது நெற்பயிர்.

"இந்த வருஷம் மட்டுமல்ல, கடந்த நான் காண்டு காலமாகவே இதுதான் நிலை!" என்றார் சென்றாராம்.

"எங்களூர்க் கண்மாய்களெல்லாம் நிறைஞ்சுடும்னு நாங்கள் பயிரிடுவோம். ஆனால் எங்களூர்க் கண்மாய்களுக்குத் தண்ணீரே வராது. பக்கத்திலுள்ள எம்.எல்.ஏ. ஊர்க் கண்மாய்களுக்கு மட்டும் தண்ணீர் ஜரூராகப் போய் நிரம்பி வழியும்!" என்றார் கிருஷ்ணசாமி என்ற விவசாயி.

"நான்தான் சார் எங்களூர் கண்மாய்களுக்கு வரும் பி. டி. ராசன் கால்வாய் வேலைகளைக் காண்ட்ராக்ட் எடுத்துச் செய்தேன். பி. டி. ராசன் கால்வாய் மூலம் மொத்தம் பதினேழு கண்மாய்களுக்குத் தண்ணீர் வர வேண்டும். ஆனால் அதிகாரிகள் இரண்டே இரண்டு கண்மாய்கள் தவிர மற்றவற்றுக்குத் தண்ணீர் விடுவதில்லை...." என்றார் ராமசாமி என்ற காண்ட்ராக்டர்.

நாங்கள் சென்றிருந்தது பெரிய குளம் தாலூகா—தேனி அருகிலுள்ள வெங்கடாஜலபுரம் என்ற கிராமம். அங்குதான் இப்படி ஆளுக்கு ஆள் எங்களிடம் வேதனையோடு முறையிட்டார்கள்.

அந்தப் பகுதியில் ஓடி வரும் முல்லையாற்று நீரை ஒரு கால்வாயின் மூலம் கொண்டு வந்தால் பல கிராமங்களிலுமுள்ள கண்மாய்கள் நிரம்பும். அதனால் சுமார் 1616 ஏக்கர் நிலம் நேரடிப் பாசன வசதி மூலம் பயனடைவதோடு, ஆங்காங்குள்ள கிணறுகளிலும் ஊற்றுப் பெருகும் வசதி கிடைக்கும் என்று 1958ல் அரசின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டது. அதுதான் இப்போது பி. டி. ராசன் கால்வாய்த் திட்டமாக உருவெடுத்திருக்கிறது.



* கண்ணன்



* கிருஷ்ணசாமி



* ராமசாமி.



* வெங்கடாசலபுரம்; காய்ந்து கிடக்கும் கண்மாய்.

இந்தக் கால்வாய்த் திட்ட வேலைகள் 1976ல் தொடங்கப் பட்டபோது, தங்கள் பகுதியிலுள்ள பதினொன்கு கண்மாய் களும் நிரம்புவதால் சுமார் 470 ஏக்கர் நிலமும் சாகுபடி வசதி பெறும் என்று மகிழ்ச்சியோடிருந்தார்கள் வெங்கடாஜலபுரம் பகுதி மக்கள். 78ல் கால்வாய் திறக்கப்பட்டதிலிருந்து 81ம் ஆண்டுவரை அந்தமகிழ்ச்சியும் நீடித்தது. கால்வாயின் மூலம் நேரடிப் பாசன வசதி பெறாத விவசாயிகள்கூடக் கால்வாய் காரணமாகத் தங்கள் கிணறுகள் நிரம்பியதால் ஆனந்தப்பட்டார்கள்.

ஆனால் நான்கு ஆண்டுகள் நீடித்த மகிழ்ச்சியும் ஆனந்தமும் திடீரென்று ஒருநாள் பறந்து போய்விட்டது. தண்ணீர் வருவது நின்று போய்விட்டது! ஏன் இப்படி? ஓர் அரசியல்வாதியின் செயல்தான் காரணம். அது என்ன, பார்ப்போம்.

முல்லையாற்றிலிருந்து நீர் கொண்டு வரும் பி.டி. ராசன் கால்வாய் வேப்பம்பட்டி என்ற இடத்தில் இரண்டாகப் பிரிகிறது. அதில் ஒன்று வெங்கடாஜலபுரம், 'அம்பா சமுத்திரம், கோவிந்த நகரம், நாகலாபுரம், ஸ்ரீரங்கபுரம்' பகுதிகளுக்கு நீர்ப்பாசன வசதி தொடுத்துக் கொண்டு தாடிச் சேரி என்ற கிராமத்திற்குச் செல்லும் கக்கான் ஓடை என்னும் மெயின் கால்வாய். மற்றொன்று வேப்பம்பட்டியில் பிரிந்து நேரடியாகத் தாடிச்சேரி கிராமத்திற்குச் செல்லும் கிளைக் கால்வாய். இந்தக் கிளைக் கால்வாய் அமைக்கப்பட்டதின் முக்கிய நோக்கமே நீர் வரவு அதிகமாக இருக்கும் சமயங்களில் தண்ணீரின் வேகத்தைச் சரிப்படுத்துவதற்காகத்தான்.

ஆனால் நிலைமை இப்போது அப்படியில்லை. "77ல் தேனி சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜெயராமன் நிலைமையையே தலைகீழாக மாற்றிவிட்டார். அவருடைய சொந்த ஊர் தாடிச்சேரி என்பதால் தாடிச்சேரிக்கு மட்டுமே நீர் கிடைத்தால் போதும் என்று நினைத்துத் தன்னுடைய ஊருக்கு வரும் கிளைக் கால்வாயை மெயின் கால்வாயாக மாற்றி, வெங்கடாஜலபுரம் பகுதிக்குச் செல்லும் மெயின் கால்வாயில் துளித் தண்ணீரையும் விடாமல் அந்தப் பகுதியையே வறண்டு போகச் செய்துவிட்டார்!" என்று ஆதங்கப்படுகிறார்கள் வெங்கடாஜலபுரம் மக்கள்.

இதைத் தட்டிக் கேட்கவும் முடியாதாம். காரணம், அவர் ஆளும் கட்சி எம்.எல்.ஏ. எனவே அவரிடம் செல்வாக்கு, ஆள் பலம், அதிகார பலம், பண பலம் எல்லாம் இருக்கிறது. இவற்றைப் பயன்படுத்தி அவர் தமது ஊருக்குத் தண்ணீர் வரவழைப்பதைத் தப்பு என்று கூற முடியாது. ஆனால் அதற்கான முறையான திட்டங்களை வகுத்து அரசின் கவனத்துக்குக் கொண்டு வந்து திட்டம் நிறைவேறப் பாடுபட்டிருக்க வேண்டாமா? ஏழை விவசாயிகள் வயிற்றிலடித்து கிளைக் கால்வாயை மெயின் கால்வாயாக மாற்றுவது போன்ற தகிடுதத்தங்களையா செய்வது? அட, அவரே இதற்குப் பொறுப்பில்லை; ஊரார் அவர் மீது அபாண்டமாகப் பழி சுமத்துகிறார்கள் என்றே வைத்துக் கொள்வதானாலும் ஒரு தவறான செயலைத் திருத்த அவர் — அதுவும் ஒரு எம்.எல்.ஏ.— முன்வர வேண்டாமா? அநீதியைப் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பதே குற்றமல்லவா?

இப்படியெல்லாம் எண்ணியவாறே, "இவையெல்லாம் உண்மைதானா?" என்று நாங்கள் கேட்டபோது, "வந்து பாருங்கள்!" என்று கால்வாய் இரண்டாகப் பிரியும் வேப்பம்பட்டிக்கே அழைத்துச் சென்று காட்டினார்கள் வெங்கடாஜலபுரம் மக்கள்.

நாங்கள் அங்கு சென்று பார்த்தபோது, இளைக் கால்வாய் பிரியும் மதகுச் சுவரின் மேல் ஒரு காலி சாராயப் பாட்டில் கிடந்து, ஏதோ ஒரு விஷயத்தை உணர்த்த முயன்று கொண்டிருந்தது. "தண்ணீர் வரும் ஒவ்வொரு நாள் இரவும் வந்து எங்களூருக்கு வரும் மெயின் கால்வாய் மதகை மூடிவிட்டுத் தங்கள் ஊருக்குச் செல்லும் இளைக் கால்வாயின் மதகைத் திறந்துவிட்டு விடுவார்கள். அதை நாங்கள் தட்டிக் கேட்கக் கூடாது என்பதற்காக இரவு முழுவதும் காவல் காக்கிறார்கள்!'' என்று சோகத்தோடு சொன்னார்கள்.

''அது சரி, இந்த அக்கிரமங்களுக்குப் பொதுப்பணித் துறை இஞ்ஜினியர்களுமா உடந்தையாக இருக்கிறார்கள்? நம்ப முடியவில்லையே!'' என்றோம்.

''அட போங்க சார்! எம்.எல்.ஏ. வீட்டுக் கன்றுக்குட்டி கத்தினால்கூடப் பயந்து நடுங்கிப் போவார்கள் அவர்கள். அதோடு எம்.எல்.ஏ. ஆட்களின் பண பலம் அதிகாரிகளைச் செழிப்படையச் செய்கிறது. அதற்குப் பிரதி உபகாரமாகத்தான் அவர்களுடைய ஊரும் செழிப்படைந்து கொண்டிருக்கிறது....''

அரசியல்வாதிகளுக்கு நல்லது கெட்டதை எடுத்துக் கூற வேண்டிய அதிகாரிகள் இன்றைய அரசியல் சூழ்நிலையில் அந்தக் கடமையை மறந்து வெறும் அடிவருடிகளாக மாறிப் போய்விட்டதை எண்ணி துக்கப்பட்டுக்கொண்டிருந்தபோது வெங்கடாஜலபுரம் மக்கள் இன்னொரு விஷயமும் சொன்னார்கள்:

''தி.மு.க.வைச் சேர்ந்த துரை என்பவரும் எம்.எல்.ஏ.க்குச் சமமான ஆள் பலம் உள்ளவர். அதனால் அவர் தோட்டத்திற்கு மட்டும் இந்தக் கால்வாய்த் தண்ணீர் சென்று கொண்டிருக்கிறது. மேலும் துணை சபாநாயகரின் தங்கை கணவர் இந்தப் பகுதிக்காரர்தான். அவருக்கும் அதிகார பலம் இருப்பதால் அவருடைய நிலத்திற்கும் ஸ்பெஷலாய்த் தண்ணீர் சென்று கொண்டிருக்கிறது. ஒரு பலமும் இல்லாத எங்கள் பகுதிதான் காய்ந்து கொண்டிருக்கிறது. குடிக்கக்கூடத் தண்ணீர் இன்றித் தவிக்கிறோம்!'' என்றார்கள்.

தொடர்ந்து குடிநீர்கூட இல்லை என்பதற்காக அதிகாரியிடம் போய் கெஞ்சியபோது அவர் ஆயிரம் ரூபாய் லஞ்சம் கேட்டார் என்பதையும் ஊர்ப் பொதுப் பணத்திலிருந்து ஆயிரம் ரூபாய் எடுத்துக் கொடுத்ததில் ஆறு மணி நேரம் மட்டுமே தண்ணீர் திறந்துவிடப்பட்டதையும் அது போதுமானதாக இல்லாததால் மறுபடியும் சென்று இன்னொரு கண்மாய்க்குத் தண்ணீர் விடும்படி கேட்டபோது மேலும் ஐநூறு ரூபாய் தராவிட்டால் தண்ணீரே விட முடியாது என்று விரட்டியடிக்கப்பட்டதையும் கண்ணன் என்ற விவசாயி விவரித்தபோது அந்தக் கிராம மக்களுக்காக மட்டுமின்றி இவ்வளவு தூரம் தரம் தாழ்ந்து போய்விட்ட அரசு அதிகாரிகளுக்காகவும் வருந்த வேண்டியதாய் இருந்தது.

வெங்கடாஜலபுரத்து மக்கள் குற்றம் சாட்டுவதுபோல், தண்ணீர் கொண்டு செல்வதில் மட்டுமல்ல; ரோடு போடுவதில்கூட தன்னுடைய ஊருக்குத்தான் முன்னுரிமை வழங்கியிருக்கிறார் எம்.எல்.ஏ. தேனியிலிருந்து கோடிவிலார்பட்டி, ஸ்ரீரங்கபுரம் வழியாக வெங்கடாஜலபுரம் செல்லும் பாதை பாதையாகவே இல்லை. சாலை முழுவதும் சரளைக் கற்கள்தான் கிடக்கின்றன. கேட்டால், 'அது வெறும் மாட்டு வண்டி செல்லும் பாதைதானே!' என்று சொல்லுகிறாராம் எம்.எல்.ஏ.

ஆக, வெங்கடாஜலபுரத்திலிருந்து நாங்கள் திரும்பியபோது, 'பண பலமும், ஆள் பலமும், அதிகார பலமும் இல்லாவிட்டால் இந்தத் தேசத்தில் வாழவே முடியாதோ' என்ற சந்தேகம்தான் எங்கள் இதயத்தைப் பாரமாக அழுத்தியது. இதற்கெல்லாம் என்றுதான் விடிவு காலம் வருமோ?

— ப்ரியன்.

படங்கள்: மனோ.

## அடுத்த இதழில்...





* காற்றில் பறந்தது காமராஜ் வாக்குறுதி
— வேதனைப்படும் விவசாயிகள்.

* ''எம். ஜி. ஆர். பேரைச் சொல்லி ஏமாத்திட்டாங்க சாமி!''
— ஆண்டிப்பட்டிக்கு ஒரு விசிட்!

* கும்பக்கரை அருவியா? கொலைகார அருவியா?
— அதிர வைக்கும் செய்திகள்.

மற்றும்

* மதுரை கலெக்டருடன் ஒரு சூடான பேட்டி!




திரைவிழாப் படக்கதை — 6

# என் ராஜாவுக்காக ஒரு நிலா

**கி**ன்ஸ்கி காரை ஓட்டிக் கொண்டே அந்த பர்லேவனச் சாலையைப் பார்த்தான். தூரத்தில் ஓர் உருவம். தளர்ந்த நடை. நெற்றியை மறைத்த தொப்பி. ஏறக்குறைய முக்கால் முகத்தை மூடிய தாடி.

அந்த ஆசாமியை நெருங்க, நெருங்க கின்ஸ்கியின் பின் மண்டை அரிக்கத் தொடங்கியது. இந்த ஆசாமி நமக்கு மிக நெருக்கமானவன் என்று மண்டையில் ஒரு குரல் ஒலிக்கத் தொடங்கியது.

டயர்கள் கதறக் கதற ப்ரேக்கை அழுத்தினான். வந்து கொண்டிருந்த அவனைப் பார்த்தான். அடையாளம் தெரிந்து அதிர்ந்தான். பிரமித்தான். ஆச்சரியத்தில் ஆழ்ந்து போனான்.

''ஹாரி..... நீயா ஹாரி.....''

அவன் பதில் பேசாமல் கடந்து செல்ல, கின்ஸ்கி கதவைத் திறந்து வெளிப்பட்டான். அவன் கையைப் பற்றினான். ''ஹாரி.... ப்ளீஸ்....'', என்றான்.

அவன் திரும்பினான். அந்தக் கண்களில் விரக்தி மட்டும்தான் இருந்தது.

''ஹாரிதானே நீ?''

அவன் மிக யோசித்து 'ஆம்' என்று தலையை ஆட்டினான்.

**கா**ர் இருவரையும் சுமந்து விரைந்தது. நெடுஞ்சாலையில் இருந்த ஒரு ஹோட்டல் அருகில் நின்றது. கின்ஸ்கி இறங்கினான். ஹாரியின் கையைப் பிடித்து இறக்கிவிட்டான். ரெஸ்டாரெண்டிற்கு அழைத்துப் போய் ஒரு டேபிளின்முன் அமர்த்தினான்.

''இதோ வந்து விடுகிறேன்'' என்று அகன்றான். தொலைபேசிக் கூண்டருகே வந்து, உள்ளே நுழைந்து, டயல் செய்யத் தொடங்க அவன் விரல்கள் நடுங்கின.

மறுமுனையில் ''ஹலோ''

''ஹலோ.... ஸ்டெல்லா.... கின்ஸ்கி. நான் ஹாரியுடன் வீட்டுக்கு வந்து கொண்டிருக்கிறேன்.... ஆம்.... ஆம்.... என் தம்பிதான். போரில் செத்துப் போய்விட்டதாகக் கருதப்பட்ட அதே தம்பிதான். உயிருடன்! முழு மனிதனாக! ஒரு குறையில்லாமல் இருக்கிறான். அழைத்து வருகிறேன்''

ஃபோனை வைத்துவிட்டான். இன்னும் மனத்தின் படபடப்பு ஓயவில்லை. இன்னும் ஹாரியை உயிருடன் பார்த்த பிரமிப்பு விலகவில்லை.

க்ளெமெண்ட் எங்கிருக்கிறாளோ?

கார்சன் தன்னுடைய உண்மையான தகப்பனை எப்படி ஏற்றுக் கொள்ளப் போகிறானோ!

**ஸ்**டெல்லா, ஹாரியைப் பார்த்ததும் மிக உணர்ச்சிவசப்பட்டாள். அவனைக் கட்டிப் பிடித்தாள். கன்னத்தில் உதடுகளை வைத்துத் தீற்றி எடுத்தாள்.

ஹாரி கட்டிப் பிடித்த அண்ணியை மெல்ல விலக்கினான்.

''என்ன ஆயிற்று ஹாரி. நீ செத்துவிட்டாய் என்று நாங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறோம்.''

''இல்லை பிழைத்துக் கொண்டேன். இப்போது கூட ரகசியமாக, பாஸ்போர்ட் அது இது என்று எதுவுமேயில்லாமல் மெக்ஸிகோ பார்டரைத் தாண்டி வந்திருக்கிறேன். எங்கே என் கார்சன்?''

அவர்கள் டேபிளைச் சுற்றி அமர ஸ்டெல்லா பரிமாறினாள். டீ.வி.யில் படம் ஓடிக் கொண்டிருக்க கார்சன் அதை வெகு கூர்மையாகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''கார்சன்.....'' என்று அழைத்தான் கின்ஸ்கி.

''ம்.''

''இது ஹாரி, என் தம்பி.

“என் க்ளெமெண்ட் எங்கே கின்ஸ்கி?”

“கேள்விப்பட்ட விஷயத்தைச் சொல்லவா ஹாரி?”

“ம்...”

“ஒரு பெண் போகக் கூடாத இடத்திற்குப் போயிருக்கிறாள் உன் க்ளெமெண்ட்!”



உன்னுடைய அப்பா.''

கார்சன் ஒருமுறை திரும்பிப் பார்த்தான். மறுபடி திரும்பி டி.வி.யைப் பார்க்கத் தொடங்கினான்.

ஹாரி தன் முகத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டான். தாடி வளர்ந்த கன்னங்கள். குழி விழுந்த கண்கள்.

அன்றிரவு ஹாரி ரகசியமாகக் கேட்டான். ''என் க்ளெமெண்ட் எங்கே இன்ஸ்கி?''

இன்ஸ்கி எச்சிலை விழுங்கினான். ''கேள்விப்பட்ட விஷயத்தைச் சொல்லவா ஹாரி.''

''ம்.''

''ஒரு பெண் போகக்கூடாத இடத்திற்குப் போயிருக்கிறாள் உன் க்ளெமெண்ட்.''

''அப்படியானால்?''

''இந்த நகரத்தில் சிவப்பாய் இருக்கும் பகுதிகளில் தேடு. உன் மனைவி கிடைப்பாள்.''

ஹாரி ஓர் ஆழ்ந்த பெருமூச்சுவிட்டான். தூங்கிக் கொண்டிருந்த கார்சனை அன்புடன் பார்த்தான்.

மறுநாள் முதல் ஹாரி ஒரு புதிய வேலையை எடுத்துக் கொண்டான். கார்சன் பள்ளிவிட்டுத் திரும்பும் நேரம் பள்ளி வாசலில்போய்நின்றுகொண்டான். கார்சன் வெளிப்பட்டவுடன் வீடுவரை அவனுடன் நடக்க ஆரம்பித்தான். இருவரும் எதிரெதிர் பிளாட்பாரங்களில் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டே போனது பள்ளிச் சிறுவர்களுக்கு ஒரு வேடிக்கையாக இருந்தது.

''கார்சன்'' என்று அழைத்தான் கூடப் படிக்கும் ஒருவன்.

''என்ன?'' என்று கேட்டான் கார்சன்.

''அந்த ஆளை உனக்குத் தெரியுமா?''

கார்சன் சிறிது யோசித்தான். ஹாரி அவன் என்ன சொல்லப் போகிறான் என்பதைக் கேட்கக் காதுகளைத் தீட்டிக் கொண்டான்.

''ம்..... அந்த ஆள் எங்கப்பாவோட தம்பி'' என்றான் கார்சன்.

ஹாரியின் முகத்தில் சட்டென்று ஒரு சோக நிழல் வந்து படர்ந்தது.

அன்றைக்கு மாலை ஹாலில் எல்லோரும்கூடினார்கள். மௌனமான ஹாரி. உற்சாகமான இன்ஸ்கி. சுறுசுறுப்பான ஸ்டெல்லா. சோகமான கார்சன்.

இன்ஸ்கிதான் திரையைச் சரியானபடி நிறுத்தி வைத்து பரபரவென்று கைகளைத் தேய்த்துக் கொண்டு, ''இப்போது பார்'' என்று சொல்லி புரொஜக்டரை இயக்க ஆரம்பித்தான். வெள்ளைத் திரையில் பிம்பங்கள் அசைய ஆரம்பித்தன.

அந்த நாள் ஹாரி உற்சாகத்துடன் குதித்தான். க்ளெமெண்டின் மூக்கைத் திருகினான். ஒரு சரியான சந்தர்ப்பத்தில் மனைவியை முத்தமிட, கார்சன் இடையில் வந்து அவர்கள் கைகளைப் பற்றினான். கார்சன் அப்பாவின்மேல் உப்பு மூட்டை ஏறினான். கடலலைகளில் கால்களை நனைத்தான். நீந்தினான். க்ளெமெண்ட் மகனை வாரியணைத்தான். முத்தமிட்டான். வாரியணைத்தாள். முத்தமிட்டாள். ஏதோ ஒரு கண்காட்சியில் குடை ராட்டினத்தில் கார்சனும் அம்மாவுமாக சந்தோஷக் கூச்சலுடன் சுற்றி வந்தார்கள். ஹாரி எட்ட நின்று தனது சொந்தங்களை வெகு பெருமிதமாகப் பார்க்க.......

படம் நின்று திரை மறுபடி வெள்ளையாகிப் போனது.

''கார்சன்'' என்று அழைத்தான் ஹாரி.

''ம்?''

''உங்கம்மாவை உனக்குப் பிடிக்குதா?''

''அது ஒரு படம். ரொம்ப நாளைக்கு முன்னால் எடுத்த படம். அவ்வளவுதான்.''

ஹாரி சற்றே ஏமாற்றமடைந்தான். சூழ்நிலையில் இறுக்கமான மௌனம் தொங்கியது. சட்டென்று அந்த மௌனத்தைக் கிழித்துக் கேட்டான்.

''கார்சன்.... உனக்கு உங்கம்மா வேண்டாமா?''

கார்சன் குலுங்கிக் குலுங்கி அழத் தொடங்கினான்.

''நோ.... மை ஸன்.... ப்ளீஸ். அழாதே. நாளையிலிருந்து உங்கம்மாவைத் தேடுறதுதான் என் முக்கிய வேலை.''

மறுநாள் அவர்கள் வேட்டை தொடங்கியது. காரில் டிரைவிங் ஸீட்டில் ஹாரி அமர்ந்

திருக்க, அருகில் குட்டி ஹாரி — கார்சன் அமர்ந்திருந்தான்.

சாலையில் பறந்த ஒவ்வொரு காரினுள்ளும் தன் தொலைந்து போன அம்மாவைத் தேடத் தொடங்கினான் கார்சன்.

''டாட்.''

ஹாரி சந்தோஷப்பட்டான். ''என்ன?'' என்றான் பரிவுடன்.

''உங்கம்மா எப்படிப்பட்டவ டாட்?''

''எங்கம்மா தேவதை கார்சன்.''

''எங்கம்மா?''

''உங்கம்மா தேவதை இல்லே. எங்கம்மா சாது. உங்கம்மா ராக்ஷஸி. எங்கம்மா அவ புருஷனுக்கு அடிமை. உங்கம்மா இல்லே. ஆனா ஒண்ணு.''

''என்னப்பா?''

''உங்கம்மா உன்னே மிகவும் நேசிக்கிறவ.''

''நிஜமா?''

''ஆம்'' என்றான் ஹாரி கியரை மாற்றிக் கொண்டே.

**நா**ன்காம் நாள் ஹாரி அவளைக் கண்டு பிடித்துவிட்டான். அவள்தான் என்று தெரிந்ததும் ஒரே பரபரப்பாக இருந்தது. தன்னை வெளிப்படுத்திக் கொள்ளத் துடித்தான். கார்சனை அழைத்து வந்து அவளிடம் சேர்த்து விடத் துடித்தான். கார்சன் அந்த நேரம் பார்த்து அருகில் இல்லை.

க்ளெமெண்டிற்கு அவனைத் தெரியவில்லை. அது ஒரு விநோதமான ஜாயிண்ட். ஓர் அறையை இரண்டாகப் பிரித்திருக்க நடுவில் கண்ணாடிச்சுவர் தடுத்தது. க்ளெமென்ட் இருந்த அறையில் ஒளி வெள்ளம். ஹாரி இருந்த அறையில் மையிருட்டு. வாடிக்கையாளர்களைத் திருப்திப்படுத்த எத்தனையோ வழிகள். அதில் இது ஒரு வழி!

ஹாரி அவளைப்பார்த்தான். ஒளி வெள்ளத்தில் அவளுடைய அகன்ற விழிகள் தெரிந்தன. புன்னகை சூடிய உதடுகள் தெரிந்தன. நாணச் சிவப்புப் பாய்ந்த கன்னம். அந்த தந்தக் கழுத்து.

''என்னைத் தெரியவில்லையா?'' என்று கேட்டான் ஹாரி.

''என்னுடைய இன்றைய மாலை கஸ்டமர்'' என்றாள் க்ளெமென்ட்.

''நான் ஹாரி, க்ளெமென்ட்'' என்றான் ஹாரி.

சட்டென்று அந்தப் பக்கத்தில் இருந்த க்ளெமென்ட் எழுந்து கொண்டாள். விளக்கை அணைக்கப் போனாள்.

''நில் க்ளெமென்ட்.... விளக்கை அணைக்காதே'' என்றான் ஹாரி.

க்ளெமென்ட் தயங்கினாள்.

''கார்சன் உனக்காகவே காத்திருக்கிறான் க்ளெமென்ட்'' என்றான்.

''நான் உங்களை எல்லாம் விட்டு வெகு தூரம் வந்துவிட்டேன் ஹாரி.''

''ச்சி என்ன பேச்சுப் பேசுகிறாய்.... இப்போதுகூட நீ இந்தப் பக்கம் வந்துவிடலாம் க்ளெமென்ட். அந்தச் சின்ன உயிர் தாயன்பிற்காக எப்படி ஏங்குகிறது தெரியுமா?''

''நிஜம்மாகவா ஹாரி?''

''ம். சத்தியமாக....''

''நான் அவனைப் பார்க்கவேண்டும் ஹாரி. திடீரென்று அவனைப் பார்க்க வேண்டும் போல ஒரு வெறி வந்துவிட்டது. அவனை நான் பார்த்தேயாக வேண்டும்.''

ஹாரி முதல் முறையாக மனம் விட்டுச் சிரித்தான். ''நாளைக்குப் பார்க்கலாம் க்ளெமென்ட். உனக்காகவே நான் ஓர் அபார்ட்மென்ட் எடுத்து வைத்திருக்கிறேன். அங்கே உன் கார்சனோடு வாழலாம் க்ளெமென்ட்! என் குரல் உனக்கு நிஜமாகவே புரியவில்லையா க்ளெமென்ட். எனக்கு மிக வசீகரமான குரல் என்று சொல்வாயே?''

''நீங்கள் போன பிறகு எனக்கு எல்லா ஆண் குரலும் உங்கள் குரல் போலவே இருந்தது ஹாரி.''

ஹாரி எழுந்து கொண்டான். ''நாளைக்குப் பார்ப்போம்'' என்றான். வெளியே வந்தான். நட்சத்திரங்கள் நிறைந்த ஆகாயத்தைப் பார்த்தான். அடி வானத்தைப் பார்த்தான். பெருமூச்சுவிட்டான்.

மறுநாள்! ஹாரி மகனின் கைகளைப் பற்றிய வண்ணம் அழைத்து வந்தான். அந்த அபார்ட்மென்ட் கதவை ரகசியமாகத் திறந்தான். பின் முதுகு காட்டி நின்று கொண்டிருந்த க்ளெமென்டை மகனுக்குக் காட்டினான். கார்சன் சட்டென்று தன்னை விடுவித்துக் கொண்டான். பாலுக்கு ஓடும் கன்று போல் ஓடினான்.

'ம்மா.'

க்ளெமென்ட் திரும்பினாள். அந்த அகன்ற

இந்த விழாவிலும் வடக்கு தெற்கு வித்தியாசங்கள் அங்கங்கே தலை தூக்கியது.

'பெட்டத ஹூவு' பட டைரக்டர் லக்ஷ்மி நாராயணன் ஒரு ப்ரெஸ் கான்ஃபரன்ஸைக் கூட்டினார். அவர் மீது என்ன கோபமோ தெரியவில்லை. டி.வி.க்காரர்களும் சரி, வீடியோ கவரேஜ்காரர்களும் சரி, எட்டிப் பார்க்கவேயில்லை.

பாசு சட்டர்ஜியைச் சுற்றி ஒரு காமிரா யூனிட்டே இயங்கிக் கொண்டிருந்தது. அவரும் மற்ற எல்லா ப்ரெஸ் கான்ஃப்ரன்ஸ்களையும் இந்த காமிரா யூனிட்டின் உதவியால் கட், ஸ்டார்ட் இல்லாமல் ஷூட் பண்ணித் தள்ளிக் கொண்டிருந்தார். அந்த காமிரா யூனிட் பாசு சட்டர்ஜியின் சொந்த காமிரா யூனிட்டோ?



விழிகள் நிறைய நீர் தத்தளித்துக் கொண்டிருக்க மகனைச் சட்டென்று வாரி எடுத்தாள். முத்தமிட்டாள். இருவரும் ஒருவருக்குள் ஒருவர் காணாமல் போக, ஹாரி புன்னகைத்தான். விழியோரத்து நீரைச் சுண்டினான்.

''குட் பை க்ளெமெண்ட்'' என்றான்.

க்ளெமெண்ட் திகைத்துப்போய்ப்பார்க்க, ''என் மனைவி என்னை விட்டு வெகு தூரப் போய்விட்டாள். என் வழி வேறாகிவிட்டது ஆனால் என் மகனை விட்டு அவள் வெகு தூரம் போகவில்லை. என் மகனுக்கு அவனுடைய அம்மா தேவைப்பட்டாள். மிக அவசியமாக. அம்மாவின் அன்பைவிட இந்த உலகில் சிறந்தது வேறு எது க்ளெமெண்ட்? எனக்குத்தான் நீ எப்போதும் அமாவாசையாக இருந்து விட்டாய். என் மகனுக்காவது நிரந்தர பௌர்ணமியாக இரேன்.''

ஹாரி அவனுடைய பதிலுக்குக் காத்திராமல் சட்டென்று இறங்கி நடக்கத் தொடங்கினான்.

ஜெர்மனி, ஃபிரான்ஸ் ஆகிய இரு நாடுகளின் கூட்டு முயற்சி PARIS, TEXAS எனும் இப்படம். பத்து நிமிடம் பிடித்ததா உங்களுக்கு முழுக் கதையையும் படிக்க! நாங்கள் இந்தக் கதையைத் தெரிந்து கொள்ள 144 ரப்பர் நிமிடங்களைக் கடக்க வேண்டி இருந்தது. பின்னணி சங்கீதம் பல இடங்களில் இல்லை என்பதே தெரியாமல் அரங்கம் அங்கங்கே குறட்டை சத்தங்கள் நிறைந்து இருந்தன. THE END என்று போட்ட போது, விழித்த நான்கு பேர் படபடவென்று கை தட்டி மற்றவர்களை எழுப்பியது சரியான ஜோர். ஜோர்! படம் அப்படி ஆனாலும் கதை என்னவோ உருக்கம்தான்.

— ஜெயமன்மதன்.

# 17 லட்சத்தில் ஒரு வேடிக்கை



* பி. முத்துசாமி.

''பக்கத்தில் கோயில் இருந்தால் பாதகமில்லை; ஆனால் எரிக்கிற சுடுகாடு இருந்தால் என்ன செய்வது?'' — இப்படி ஆதங்கப்படுகிறவர்கள் எல்லீஸ் நகர வாசிகள்.

மதுரை பஸ் ஸ்டாண்டை ஒட்டி அமைந்துள்ள நகர். வரிசையாக ஹவுஸிங் போர்டு கண்ட்ரோலில் உள்ள வீடுகள். 82ல் இந்த நகர் உருவான போது சுடுகாடு சற்றுத் தூரத்தில் இருந்தது. இப்போது நகர் விரிவடையவும் சுடுகாட்டுக்கு மிக நெருக்கத்தில் 'ஃபினாட்' சிஸ்டத்தில் வீடுகள். சுடுகாட்டிற்கென்று தனியாக வேலியுமில்லை. காலனி வாசிகள் பலருக்கும் இதில் மிகவும் அதிருப்தி. பிணங்களை எரிக்கிற போது நாற்றம் காலனி முழுக்க வீசுகிறது என்றார்கள். நம்மையும் கூட்டிக் கொண்டு போய்க் காட்டினார்கள். வெகு நெருக்கத்தில்தான் இருந்தது சுடுகாடு.

எல்லீஸ் நகர் சங்கச் செயலாளரான முன்னாள் தாசில்தார் பி. முத்துசாமி சொன்னார். ''இதை எதிர்த்து மனுக்கள் கொடுத்து விட்டோம். சுடுகாட்டை மாத்தறேன்னாங்க. அப்புறமும் அப்படியேதான் வைச்சிருக்காங்க. ஏறத்தாழ ஆயிரம் வீடுகள் இருக்கிற இடத்தைச் சரியாகப் பராமரிக்காமல் வைச்சிருக்காங்க. அதனாலேதான் இதை ஹவுஸிங் போர்டு பராமரிப்பிலிருந்து மாநகராட்சியை ஏற்றுக் கொள்ளச் சொல்லிக் கேட்டோம். மாநகராட்சி இதற்கு ஒப்புக் கொள்ளவில்லை. மாதா மாதம் நிர்வாக வசதிக்கென்று ஒவ்வொரு வீட்டிலிருந்தும் அறுபது ரூபாய் கட்டுகிறோம். என்ன பிரயோஜனம்? இதுவரை குடிதண்ணீர் வசதி கூடக் கிடையாது...'' என்றவர், ''வாங்க போகலாம்'' என்று சற்றுத் தள்ளியிருந்த 'வாட்டர் டேங்கி'டம் அழைத்துச் சென்று காட்டினார். ''இந்த டேங்க் கட்டுறதுக்கு 17 லட்சம்ரூபா வரைக்கும் ஆயிருக்கு. 7 லட்சம் காலன் தண்ணீர் கொள்ளளவு பிடிக்கும்கிறாங்க. ஆனால் கட்டி மூணு வருஷமாச்சு. இதுவரைக்கும் தண்ணீர் வரலே. இது வரைக்கும் தண்ணீர் வர்றதுக்கான எந்த முயற்சியும் செய்யலே'' என்றார்.

டேங்க் மட்டும் பிரும்மாண்டமாக நிற்கிறது. இவ்வளவு லட்சம் ரூபாய் செலவழித்து — வேடிக்கை பார்ப்பதற்காக — ஹவுஸிங் போர்டு கட்டி வைத்திருக்கின்றதா என்ன? அக்கிரமமாக இருக்கிறது.

— நமது நிருபர்கள்.

படங்கள்: யெம். யெம். ஐ.

# மணங்கவர்ந்த விலையில் உளங்கவர்ந்த வெண்மை...



டிடர்ஜெண்ட் பவுடர்
வாங்குவதில் சரியான
புத்திசாலித்தனம்
இதுவே







இதன் ரகசியம் ? அதி அற்புத அல்ஃபாஒலெஃபின்—பெஸ்டோவில் மட்டுமே உள்ள சக்திவாய்ந்த விசேஷப் பொருள். காட்டன் துணியானாலும் சரி, சாட்டினாக இருந்தாலும் சரி, சின்த்தடிக் ஆனாலும் சரி, பட்டுத் துணியானாலும் சரி, எல்லா ரகத் துணிகளின் உண்மைத் தன்மையை பெஸ்டோ பாதுகாத்து நீடிக்கச் செய்கிறது. உங்கள் கைகளின் மென்மையையும் பாதுகாக்கிறது.

பெஸ்டோ வின் தும்பைப்பூ துவைப்பைப் பாருங்கள். குறைந்த விலை பெஸ்டோ, மலிவான பவுடர்களைத்தூக்கியடிக்கும். வெளிக்கும் வெண்மையிலே விலையுயர்ந்த பவுடர்களின் தரத்தை வென்று காட்டிவிடும்.

**கோத்ரெஜ் தரும்**

**புதிய**

# பெஸ்டோ

**ப்ளூ டிடர்ஜெண்ட் பவுடர்**

CHAITRA-B G 356 TAM

"சத்தியம் பண்ணட்டுமா?"

"எம்மேலே பண்ணாதே... பொறக்கப் போற நம்ம புள்ளை மேலே சத்தியமா... சொல்லுய்யா..?"

# A ஃபார் ஆப்பிள் M ஃபார் மர்டர்

௯

கன்னியப்பன் டாக்ஸியை மனத்தில் அலையடிக்கிற உற்சாகத்தோடு விரட்டிக் கொண்டிருந்தான். மழை ஓய்ந்து போயிருக்க, ரோடுகள் சோடியம் வேப்பர் வெளிச்சத்தோடு ஈரமாய்த் தெரிந்தன. மழை காரணமாகப் போக்குவரத்து சோம்பல் முறிக்க—டாக்ஸி விர்ரென்று போயிற்று.

''அமிஞ்சிக்கரையில் எங்கேம்மா போகணும்?''

''அருண் ஹோட்டல் கிட்டே...''

''மீட்டருக்கு மேலே இரண்டு ரூபா போட்டுக் குடுங்கம்மா... திரும்பி வர்றப்ப சவாரி யில்லாமேதான் வரணும்...''

''வாங்கிக்க...''

''தாங்க்ஸ்ம்மா...''

கன்னியப்பனின் உள்ளத்தில் சந்தோஷ டவுண்டன் பீய்ச்சியடித்தது. இன்னிக்கு யார் முகத்துல முழிச்சோம்? இன்னிக்கு எல்லாமே கஞ்சத்தனம் பார்க்காத சவாரிகளா மாட்டுது...? கன்னியப்பா... இன்னிக்கு மெட்ராஸ்லமட்டும்மழையில்லே...உன்னோட காட்டிலேயும் மழைதான்.

கீதா டாக்ஸியின் பின்பக்கக் கண்ணாடி வழியே குனிந்து பார்த்தாள். ஒரு ஐம்பது மீட்டர் தள்ளி மிதமான வேகத்தில்—டாக்ஸியை விரட்டியபடி வந்து கொண்டிருந்தான் சந்திரபோஸ். வேனின் ஹெட்லைட் வெளிச்சம் டாக்ஸியின் உடம்பை நனைத்தது.

கீதா கூப்பிட்டாள்.

''டிரைவர்...''

''என்னம்மா...?''

''குடிச்சிருக்கியா...?''

காதோரத்தைச் சொறிந்து கொண்டு சிரித்தான் கன்னியப்பன். ''அம்மா... கொஞ்சம்...''

''குடிச்சுட்டு டாக்ஸியை ஓட்டறது தப்பில்லே...?''

''தப்புதாம்மா... நான் என்னிக்கும் குடிக்க மாட்டேன்... இன்னிக்குப் பூராவும் மழையும் குளிருமா இருந்துச்சு... அதான்...''

டாக்ஸி கீழ்ப்பாக்கம் மெடிகல் காலேஜ் ஹாஸ்டலைத் தாண்டியது. ''டாக்ஸியை ஈகா தியேட்டர் பக்கமா நிறுத்திக்க டிரைவர்...''

''ஏம்மா... அருண் ஹோட்டல் போணும்னு சொன்னீங்க...?''

''வேண்டாம்... நான் இங்கேயே இறங்கிக்கிறேன்...''

''சரிம்மா...''

டாக்ஸியை ஈகா தியேட்டருக்கு எதிரே ஓரம் கட்டி நிறுத்தினான் கன்னியப்பன். மீட்டரைப் பார்த்துச் சொன்னான். பணத்தைக் கொடுத்துவிட்டுக் கீழே இறங்கினாள்.

''தேங்க்ஸ்ம்மா...''

டாக்ஸி திரும்பிப் போக—பச்சையப்பன் கல்லூரி இருந்த பக்கமாய் மெதுவாய் நடக்க ஆரம்பித்தாள் கீதா.

ஒரு நிமிஷ நடைதான்.

பின்னால் வேனின் ஹாரன் சத்தம் கேட்கத் திரும்பினாள்.

சந்திரபோஸ்—கதவைத் திறந்து சைகை காட்ட—ஓடி வந்து ஏறிக் கொண்டாள். பெருமூச்சு விட்டாள்.

''இந்தப் பத்து நிமிஷமும் தவிச்சுப் போயிட்டேன்...

''ஏன்...?''

''டாக்ஸியை எந்த போலீஸ்காரனாவது நிறுத்தி செக் பண்ணியிருந்தா...?''

''அப்புறம் மாட்டிக்கப் போறவன் டாக்ஸி டிரைவர்தான்... நீ டாக்ஸியில் ஏறின ஒரு பாஸஞ்சர்... அவ்வளவுதான்... ஆமா... யாமினியோட வானிடி பேக்கை டாக்ஸியோட சீட்டுக்குக் கீழே போட்டு வெச்சியா...?''

''போட்டு வெச்சிருக்கேன்...''

''இன்னும் நாம பண்ண வேண்டிய ஒரு வேலை... இருக்கு கீதா...''

''என்ன...?''

''டாக்ஸிக்குள்ளே பாடி இருக்கிற விஷயத்தைப் போலீஸுக்கு நாசூக்கா சொல்லணும்...''

''எப்படிச் சொல்லப் போறோம்?''

''யோசிப்போம்...''



ராஜேஷ்குமார்

வேனை மெதுவாய் நகர்த்திக் கொண்டு போனான் சந்திரபோஸ்.

**தி**ருஞானம் தூறுகிற மழையையும் பொருட்படுத்தாமல் வாசலில் நின்று தெரு முனையையே பார்த்துக் கொண்டிருக்க— அவருக்குப் பின்பக்கமாய் வந்து நின்ற ஆனந்தி அழுகை அடைக்கிற குரலில் சொன்னாள்: "என்னங்க... எனக்கென்னவோ பயமாயிருக்குங்க... நீங்க அந்தக் கம்பெனிக்கு இன்னொரு வாட்டி போன் பண்ணிப் பாருங்களேன்..."

"இதோட அஞ்சு தடவை போன் பண்ணிக் கேட்டுட்டேன் ஆனந்தி... ரிஸீவரை டைம் ஆபீஸ்லதான் யாரோ எடுக்கறாங்க... யாமினி சாயந்தரமே புறப்பட்டுப் போயிட்

டதா சொல்றுங்க. நானே நேர்லபோயிட்டுத் தானே வந்தேன்...''

''எனக்கு நெஞ்செல்லாம் 'பக் பக்'ன்னு அடிச்சுக்குதுங்க... மணி எட்டாகப்போகுது.. நீங்க கூட ஒரு வாட்டி பல்லாவரம் போயிட்டு வந்திட்டீங்க... யாமினியை இன்னும் காண லேயே...'' அழவே ஆரம்பித்துவிட்டாள் ஆனந்தி.

''பஸ்ஸை விட்டிறங்கி... சிநேகிதங்க யாருடைய வீட்டுக்காவது போயிருப்பாளோ...?''

''அப்படியெல்லாம் அவ போக மாட்டாங்க...''

''பின்னே எங்கேதான் போயிருப்பா...?''

''என்ன பொண்ணு வந்துட்டாளா...?'' குரல் கேட்டுத் திரும்பினார்கள் திருஞானமும் ஆனந்தியும்.

தரகர் விரித்த குடையோடும், தாம்பூல வாயோடும் நின்றிருந்தார். 'புளிச்' சென்று எச்சிலைத் துப்பிவிட்டு அவர்களை நெருங்கினார்.

''நீங்க கம்பெனிக்குப் போய் அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டரைக் கூட வாங்கிட்டு வந்துட்டீங்க... ஆனா இண்டர்வியூவுக்குப் போன பொண்ணைக் காணோம்... ஆச்சரியமாயிருக்கு... பேசாமே போலீஸ்லே போய்ச் சொல்லிடுங்க...''

ஆனந்தி மறுத்தலாய்த் தலையாட்டினாள். ''வேண்டாங்க... போலீஸ் வரைக்கும் போகாதீங்க... எம் பொண்ணு எப்படியும் வந்துடுவா... போலீஸுக்குப் போனால் விஷயம் ரசாபாசமாப் போயிடும்...''

''மாப்பிள்ளை வீட்டுக்குப் போய் நான் என்ன தகவலைச் சொல்லட்டும்... திருஞானம்? அவங்க காத்திட்டிருப்பாங்களே...?''

கல்யாணத்தரகர் அவர்களுடைய மனநிலையைப் புரிந்து கொள்ளாமல் புளிச்சென்று மறுபடியும் ஒருவாய் எச்சிலைத் துப்பிவிட்டுக் கேட்டார்.

திருஞானம் சொன்னார். ''அவங்க எந்தத் தேதியில் முகூர்த்தம் வெச்சுக்கிட்டாலும் எங்களுக்குச் சம்மதம்னு சொல்லிடுங்க....''

''சரி சொல்லிடறேன்... நான் வரட்டுமா? பொண்ணு வந்துடுவா... வழியில ஃபிரெண்ட்ஸ் யாரையாவது பார்த்திருப்பா... பேசிட்டு... ஹோட்டல்ல போய் டிபன் சாப்டுட்டு ஊர்க் கதையெல்லாம் பேசிட்டு வருவா...''

தரகர் நகர்ந்து விட்டார்.

ஆனந்தி இருதயத்தில் கைபதித்துக் கொண்டு — வாசல் திட்டிலேயே உட்கார்ந்து கொண்டாள். திருஞானத்தின் வயிற்றை எதுவோ பிசைந்து அவஸ்தை செய்தது.

''ஆனந்தி... நா வேணும்னு... பஸ் ஸ்டாப் வரைக்கும் போய்ப் பார்த்துட்டு வரட்டுமா...?''

ஆனந்தி துக்கத்தில் வெடித்தாள்.

''போங்க... எங்கேயாவது போய்... எப்படியாவது... எம் பொண்ணைக் கொண்டு வாங்க... ரொம்ப தூரத்துல இருக்கிற இடத்துக்கெல்லாம் பொண்ணை அனுப்பாதீங்கன்னு தலைதலையா அடிச்சுக்கிட்டேன்... நீங்க கேக்கலை... வறட்டுத் தைரியம் சொன்னீங்க... இப்பப் பார்த்தீங்களா...? வயித்துல நெருப்பைக் கட்டிக்கிட்டுத் தவிக்கிறோம்...''

திருஞானம் 'நெக்... நெக்...' என்று அதிர்ந்து கொள்ளும் இருதயத்தோடு தெரு முனையிலிருந்த பஸ் ஸ்டாப்பை நோக்கிப் போனார்.

அதுவரைக்கும் கம்மென்று இருந்த வானம், யாரோ காட்டிய சைகைக்குக் கட்டுப்படுகிற மாதிரி கல்யாண வீட்டுப் பன்னீர்ச் செம்பாய்த் தூற ஆரம்பித்தது.

**வே**னை அந்த டெலிபோன் பூத் அருகே நிறுத்தினான் சந்திரபோஸ். சுற்றும் முற்றும் ஒருமுறை பார்த்துக் கொண்டு கீழே இறங்கினான்.

''கீதா... நீயும் வா...''

வந்தாள்.

டெலிபோன் பூத்துக்குள் இருவரும் நுழைந்து, கண்ணாடிக் கதவைச் சாத்திக் கொண்டார்கள். சந்திரபோஸ் ஒரு எட்டணா நாணயத்தை உள்ளங்கையில் வைத்துக் கொண்டு — 100 எண்ணை டயல் செய்தான். மறுமுனையில் ஹலோ கேட்டதும் — எட்டணா நாணயத்தைச் சொருகி லைனை உயிர்ப்பித்துக் கொண்டான்.

''ஹலோ போலீஸ்?''

''எஸ்...''

''என்னைப் பத்தித் தெரிஞ்சுக்க ஆர்வப்படாதீங்க... நான் ஒரு வழிப்போக்கன்... கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி நான் பார்த்த ஒரு சம்பவத்தை உங்களுக்குச் சொல்றேன்... முடிஞ்சா நடவடிக்கை எடுங்க...''

''என்ன சம்பவம்...?''

''கொஞ்ச நேரத்துக்கு முன்னால நான்



''உங்கப்பா பாங்க் மானேஜரா இருக்கலாம், அதுக்காக இப்படியா?''

''என்ன இப்போ?''

''அவர் வாங்கித் தந்த ஸ்கூட்டரில் 'நிதி உதவி: மாமனார் மன்னார்சாமி'ன்னு கொட்டை எழுத்தில் எழுதியிருக்காரே!''

— நெல்லை. அ. கதிர்வேல்.



## அதிசயம் பார்க்க வேண்டுமா?

பார்ப்பதற்கு நீரோடை போல் காட்சி தரும் இதில்தான் வயல்களுக்குத் தேவையான தண்ணீரும் போகிறது; பஸ் லாரி என்று மற்ற வாகனங்களும் செல்கின்றன. இந்த 'டு இன் ஒன்' அதிசயத்தை மதுரை மாவட்டத்திலுள்ள சின்னமனூருக்கு அருகிலிருக்கும் ஓவியம்பட்டியில் பார்க்கலாம்!

— நமது நிருபர்.

ஈகா தியேட்டர் பக்கமா வந்திட்டிருந்தப்ப... ஒரு டாக்ஸி டிரைவருக்கும் ஒரு பொண்ணுக்கும் ஏதோ வாக்குவாதம் நடந்திட்டிருந்தது. குடிச்சுட்டு டாக்ஸியை ஓட்டறது தப்புன்னு அந்தப் பொண்ணு சொல்லிட்டிருந்தா... அவன் அதுக்கு திருவெட்டா என்னவோ பதில் சொன்னான்.. அந்தப் பொண்ணு போலீஸ் ஸ்டேஷனுக்கு நடன்னு சொல்ல—டாக்ஸி டிரைவர் கெட்ட வார்த்தையாலே திட்டி... வாடி... போலாம்னு அவளை டாக்ஸியில தள்ளி — ஓட்டிக்கிட்டுப் போனான். டாக்ஸி போகப்போகவே ரெண்டு பேருக்கும் சண்டை... ஒரு டாக்ஸி டிரைவர் ஒரு லேடி பாஸஞ்சர் கிட்டே இப்படித்தான் அநாகரிகமா நடந்துக்கிறதா? உங்க போலீஸ் இதுக்கு என்ன நடவடிக்கை எடுக்கப் போகுதுன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?''

மறுமுனையில் குரல் கரகரத்தது.

''நீங்க இவ்வளவு தூரம் இண்ட்ரஸ்ட் எடுத்துக்கிட்டு போலீஸுக்குத் தகவல் தந்திருக்கீங்க... அந்த டாக்ஸி நெம்பரை நோட் பண்ணினீங்களா?''

''பண்ணியிருக்கேன் ஸார்...''

''நெம்பரைச் சொல்லுங்க... ஆக்ஷன் எடுக்கிறோம்...''

''MDA 2838.''

ரிஸீவரைத் தொங்கவிட்டான் சந்திரபோஸ்.

கீதா சுறு தெரியச் சிரித்தாள். ''சந்திரபோஸ் உனக்கு அபாரமான மூளை... போலீஸை அழகா திசை திருப்பி விட்டிருக்கே... எம். டி. நிச்சயமா பூரிச்சுப் போவார்...''

அவளுடைய மோவாயைச் சுண்டினான் சந்திரபோஸ். ''இனிமே யாமினியைப் பத்தி நாம பயப்பட வேண்டாம். அந்த டாக்ஸி டிரைவர் பாடு... போலீஸ் பாடு...''

பூத்தின் கண்ணாடிக் கதவைத் திறந்து கொண்டு—வெளியே வந்து வேனில் பரவினார்கள். சிகரெட் ஒன்றைப் பற்ற வைத்துக் கொண்டே சந்திரபோஸ் புகையும் வாயோடு வேனை நகர்த்தினான்.

**அ**ந்த ஓட்டு வீட்டுக்கு முன்னால் டாக்ஸியை நிறுத்திவிட்டு ஒரு சந்தோஷ விசிலோடு கீழே இறங்கினான் கன்னியப்பன்.

ஒரு கையில் பிரியாணிப் பொட்டலமும், இன்னொரு கையில் மல்லிகைப் பூப்பந்தும் மணத்தது.

சத்தம் கேட்டுக் கதவைத் திறந்து எட்டிப் பார்த்தாள் மரகதா — அவனுடைய மனைவி. ஏழு மாச கர்ப்பத்தில் வயிறு பம்மலாய்த் தெரிய — ஒடிசலாய் இருந்தாள் மரகதா. முகத்தில் கிராமியத்தனமான பாவம். பெரிய கண்களில் பொய்க்கோபம். கன்னியப்பனைப் பார்த்ததும் விசுக்கென்று உள்ளே போனாள்.

''போச்சுடா...'' தலையில் கை வைத்துக் கொண்டு அவளைப் பின்தொடர்ந்தான். ''மரகதா... உனக்கு என்னாச்சு...?''

''என்கிட்ட பேசாதேய்யா... நான் கோபமா இருக்கேன்...''

''தாம்பரம் வரைக்கும் போயிட்டு வர்றேன்... மரகதா... அதான் லேட்டு.''

''அப்படியே உளுந்தூர்பேட்டை வரைக்கும் போயிட்டு வர்றதுதானே...?''

''ஸாரி... இனிமே நேரத்துலே வந்துடறேன்...''

''வாசம் அபாரமா வருது...''

''வேலு மிலிட்டரிக்கடை பிரியாணின்னு சும்மாவா...?''

''நான் அந்த வாசத்தைச் சொல்லலேய்யா... பட்டைச் சாராயத்தை ஊத்திகிஉனு வந்திருக்கியா?''

''கொஞ்சம்...''

''அந்தக் கசமாலத்தை நீ விடவே மாட்டியா...?''

''இன்னியிலிருந்து உட்டுடறேன்...''

''எத்தனையோ வாட்டி இப்படி சொல்லியாச்சு...''

''இப்ப சொல்றது நிஜம்...''

''சத்தியம் பண்றியா...?''

''பண்றேன்... உம் மேல பண்ணட்டுமா...?''

''எம்மேல பண்ணாதே...'' என்றவள் கன்னியப்பனின் கையைப் பிடித்துத் தன் மேடுற்ற வயிற்றின் மேல் வைத்துக் கொண்டாள். ''பொறக்கப் போற நம்ம புள்ளை மேல சத்தியமா... சொல்லுய்யா...?''

அவன் சொன்னான்.

அதே விநாடி —

வாசலில் சின்ன இரைச்சலாய் ஏதோ சத்தம்.

எட்டிப் பார்த்தான் கன்னியப்பன்.

போலீஸ் ஜீப்.

(தொடரும்)

# மதுரையில்

## 21 ஆண்டு சேவையில் நாங்கள் அளிப்பது தரமான பட்டு ரகங்கள் மட்டுமே



கண்கவர் காஞ்சிபுரம்

பகட்டான பனாரஸ்

அழகான ஆரணி

தரமான தர்மாவரம்

**பட்டுப் புடவைகள்**

**பட்டுப் பாவாடைகள்**

**பட்டு ஜவுளிகள்**

தேர்ந்தெடுக்க

மகராசியான ஸ்தாபனம்

# ராஜமஹால்

பட்டு ஜவுளி மாளிகை

37, வெங்கலக் கடைத் தெரு,

மதுரை-625 001.

போன் : 22647 தந்தி : SAREE HALL

# கிழக்கே ஓர் உலகம்

## 9. ஃபீஜி இந்தியர்களின் எதிர்காலம்?

வாஸந்தி.

முதியவர்களும் யுவதிகளுமாய் எளிய கிராமத்துப் பெண்கள். தென்னிந்திய ஜாடை. சற்று வயதான பெண்கள் சரளமாகத், தமிழ் பேசினார்கள். சிலர் தெலுங்கு, சிலர் மலையாளம். பெங்களூரைச் சேர்ந்த ஒரு பெண்மணி கூட அங்கு இருந்தார். தமிழைத் தவிர வேறு சில இந்திய மொழிகளையும் என்னால் ஓரளவுக்குப் பேச முடிந்தது கண்டு அவர்கள் கண்களில் சந்தோஷம் பளிச்சிட்டது. ஆசார உபசாரம் செய்து திணற அடித்துவிட்டரார்கள். அவர்கள் பேச்சிலிருந்த கனிவையும் பிரியத்தையும் கண்டு, இவர்களுடைய அன்புக்கு என்ன காரணம்? இவர்களுக்கும் எனக்கும் என்ன தொடர்பு? என்கிற கேள்விகள் என்னுள் எழுந்த போதே விடையும் கிடைத்துவிட்டது.

என்னைச் சுற்றி அமர்ந்து, "எங்களைப்பற்றிச் சொல்ல அதிகமில்லே. நீங்கதான் பேசணும்மா" என்றார்கள். "உங்க பேச்சைக் கேட்கத்தான் நாங்கள் வந்திருக்கிறோம். சொல்லுங்க. தேசம் (இந்தியா) எப்படியிருக்கும்? கோவிலுங்க எப்படியிருக்கும்? பூஜையெல்லாம் அங்கே எப்படிச் செய்வாங்க? என்ன மாதிரி சமையல் செய்வாங்க? எங்களுக்கெல்லாம் எதுவும் தெரியாது. தெரிஞ்சுக்கணும்னு ரொம்ப ஆசை."



* ஃபீஜி தீவுகளின் இயற்கை எழில்களை ரசிக்க வரும் டூரிஸ்டுகள் ஏராளம்.



* ஃபீஜி தீவுகளைச் சுற்றிப்பார்க்க தராவலர் கிராஃப்ட்.

அவர்கள் கண்களிலிருந்த ஆர்வம் என்னுள் ஒரு சிலிர்ப்பை ஏற்படுத்தின்று.

"உங்களுடைய அப்பா, அம்மா, தாத்தா, பாட்டி இவங்கள்ளாம் உங்களுக்கு எதுவும் சொன்னதில்லையா?"

"அதிகமா சொன்னதில்லே" என்றார் அவர்களது தலைவி தெய்வயானை. "அவங்க படிச்சவங்க இல்லே. ஏதோ கஷ்டத்திலேலே, எங்கேயோ போறோம்னு தெரியாம சின்ன வயசிலேயே-

இத்தனே தொலைவு வந்தவங்க. இங்கே யும் ரொம்பக் கஷ்டப்பட்டாங்க. அதுக்கு நடுவிலே தேசத்தைப் பத்திப் பேசற துக்கெல்லாம் எங்கே நேரம்? அப்பாரு எப்ப வாவது சொல்லுவாரு. 'தேசத்திலே கோவில் ரொம்பப் பெரிசாயிருக்கும்; மூணு வேளை பூஜை நடக்கும்' பாங்க. 'தினுசு தினுசா சமை யல் சாப்பாடு இருக்கும்' பாங்க. அவங் கள்ளாம் ஏதோ ஞாபகத்திலே சொல்லிக் கொடுத்த மாதிரி நாங்க சமைக்கிறோம். சாமி கும்பிடறோம். முறையா என்ன செய்ய ணும்னு தெரியாது.''

''உங்களுடைய பெரியவங்க இங்கே ரொம்பக் கஷ்டப்பட்டாங்கன்னு கேள்விப் பட்டிருக்கேன். நீங்கள்ளாம் நல்லாயிருக் கீங்களா?''



* பள்ளி ஆசிரியர்களின் கார் வரிசை.

''நல்லாயிருக்கோம்மா. ஒரு குறையுமில்லே. சாப்பாட்டுக்குக் கஷ்டமில்லே.''

''எல்லாரும் ரொம்பக் கடுமையா உழைப்போம்'' என்றார் தெய்வ யானை. ''சும்மா உட்கார்ந்திருக்கிற ஆணேயோ·• பெண்ணேயோ நீங்க இங்கே பார்க்க முடியாது.''

''தேசத்தைப் பார்க்கணும்னு உங்களுக்கு ஆசையில்லையா?''

''ரொம்ப இருக்கும்மா! ஆனா அந்த ஆசை இந்த ஜன்மத்திலே நிறைவேறுமோ என்னவோ!''

''தேசத்தைப் பார்க்கிற பாக்கியம் தான் இல்லே. தேசத்திலேந்து வந்திருக்கிற உங்களேயாவது பார்க்கணும்னு வந்திருக் கோம்!''

அந்தக் கணத்தில், அவர்கள் முன் 'நான்' என்கிற 'அகம்' கரைந்து தூசாகி நின் றேன். இந்தப் பரிவும் வரவேற்பும் எனக் கில்லே. இவர்கள் மூதாதையர்கள் பிறந்த நாட்டைச் சேர்ந்தவள் நான் என்கிற கார ணத்தினுல் என்னில் இந்தியாவைக் காண் கிற வரவேற்பு!

ஃபீஜி தீவுகளில் தென் இந்திய சன் மார்க்க ஐக்கிய சங்கம் நிறுவியிருக்கும் பள்ளிகள் எல்லாவற்றுடனும் கோவில்கள் இணைந்திருப்பது போல மாதர் சங்கங் களும் இணைந்திருப்பதாக நாயுடு சொன்னுர். பள்ளியைச் சேர்ந்த அல்லது கோவிலேச் சேர்ந்த எந்த விசேஷமாக இருந்தாலும் இந்த மாதர் சங்கங்கள் பொறுப்பேற்று நடத்து கின்றன. கோவிலேச் சுத்தமாக வைத்துக் கொள்வதும் அவர்களுடைய பொறுப்பு. நான் சென்ற ஊர்களிலெல்லாம் கொடுக்கப் பட்ட விருந்துகளில் சமையல் செய்தது மாதர் சங்கத்து அங்கத்தினர்கள்தான். சமூக சேவையாய் எந்த அனுகூலத்தையும் எதிர் பாராமல் பெண்கள் இத்தனே ஒற்றுமையாய் செயல்பட்டது மிகுந்த மகிழ்ச்சி அளித்தது. மனம் விட்டுப் பாராட்டினேன்.

சங்கம், நாண்டியில் நடத்தும் உயர்நிலேப் பள்ளிக்கு என்னே அழைத்துச் சென்ருர்கள். சுற்றுச் சுவருக்குள் வரிசையாகக் கார்கள் நின்றிருந்தன. எல்லாம் ஆசிரியர்களின் கார்கள் என்று அறிந்து ஆச்சரியமாக இருந் தது. அநேகமாகக் கார் வைத்துக் கொள்ளாத இந்தியக் குடும்பமே நகர்ப்புறத்தில் இல்லே என்ருர்கள். கணவன் மனைவி இருவருமே பள்ளி ஆசிரியராக உத்தியோகம் பார்த்தால் ராஜபோகமாக வாழலாம் என்ருர்கள். சிலர் இரண்டு கார்கள்கூட வைத்திருந்தார்கள். சொந்த வீடு, அநேகமாக எல்லாருக்குமே



* ஃபீஜியர்கள் சுபாவத்தில் மிக நல்லவர்கள். பொரு ளாசையற்றவர்கள்.

இருந்தது.

பள்ளிக்கட்டிடங்கள் விஸ்தாரமாக நவீன மாகத் துப்புரவாக இருந்தன. இந்தியா விலிருந்து வந்திருக்கும் எழுத்தாளரைப் பார்க்கும் ஆர்வம் பள்ளியின் மையக் கூடத் தில் குழுமியிருந்த மாணவ மாணவியரின் முகத்தில் தெளிவாகத் தெரிந்தாலும், ஒரு சின்ன சத்தம் இல்லே. பேச்சில்லே. விஷமச் சிரிப்பில்லே. பள்ளித் தலேவரும் மற்ற உபாத்தியாயர்களும் மேடையில் அமர்ந்த போது அங்கு நிலவிய நிசப்தம் எனக்கு நம்ப முடியாததாக இருந்தது. எந்த ஊரில்

எந்தப் பள்ளிக்குச் சென்றாலும் இதே கட்டுப்பாடு நிலவியதைக் கண்டேன்.

"பா" என்ற ஒரு மிக அழகிய அமைதியான நகரத்தில் அடுத்த இரண்டு நாட்கள் மிஸ் லக்ஷ்மி பிள்ளை என்பவர் வீட்டில் தங்க ஏற்பாடு செய்திருந்தார்கள். லக்ஷ்மி பிள்ளை சங்கம் உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியையாக இருக்கிறார். அவருடைய தந்தை, திருச்சியிலிருந்து ஃபீஜிக்கு அரசாங்க உத்தியோக நிமித்தம் வந்தவர். இங்கு குழந்தைகளுக்குத் தேவாரம், திருவாசகம் சொல்லிக் கொடுத்திருக்கிறார்.

என்னுடைய வரவு ஃபீஜி இளைஞர்களைக் கூட உற்சாகப்படுத்தும் என்று நான் நினைத்திருக்கவில்லை. 'பா' நகரத்தில் சங்கம் உயர்நிலைப் பள்ளி மாணவ மாணவியர் ஃபீஜி கலாசார முறைப்படி என்னை வரவேற்க விரும்புவதாகத் தங்கள் தலைமை ஆசிரியரிடம் தெரிவித்திருக்கிறார்கள். அனுமதி கிடைக்கவே அமர்க்களப்படுத்திவிட்டார்கள்! பழங்குடி மக்களின் அலங்காரங்களுடன் வந்து அமர்ந்து, யங்கோனா சடங்கைச் செய்து, மாலை அணிவித்து, பாட்டுப் பாடி, வாழ்த்துச் சொல்லி என்னைத் திக்குமுக்காட வைத்துவிட்டார்கள்.

சீக்கியர்கள் நடத்தும் கால்ஸா கல்லூரியிலும் அயர்லாந்து பாதிரிகள் நடத்தும் புனித ஜேவியர் கல்லூரியிலும் ஆசிரியர்களும் மாணவர்களும் காணக் கிடைக்காத நபரை வரவேற்பதுபோல் என்னை நடத்தியது நெகிழ வைத்தது. 'இந்தியா' என்கிற நினைவும் அதைப் பற்றி அறிந்து கொள்ளும் ஆர்வமும் எப்படி இவர்களைத் துடிப்புடன் இயங்கச் செய்கிறது என்று உணர்ந்து உருகிப்போனேன். எங்கு சென்றாலும் பேசச் சொன்னார்கள். ஆர்வத்துடன் கேட்டார்கள். என் எழுத்தைப் பற்றி, என்னைப் பற்றி கேள்விகள் கேட்டார்கள்.

மாணவர்களுக்கு இந்தியாவைப் பற்றி, அதன் பூகோளம், சரித்திரம், பண்பாடு — இவை பற்றிய பொது அறிவு இல்லை என்று நான் புரிந்து கொண்டேன். "இது ஏன் இப்படி? இவர்களது மூதாதையரின் நாட்டைப் பற்றி இவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டாமா?" என்று வினா எழுப்பினேன்.

"நியூஜிலாந்துக் கல்வி முறையை இங்கு பின்பற்றுவதால் அதில் இடம்பெறும் பாடங்களைத்தான் நாங்கள் கற்பிக்க வேண்டியிருக்கிறது. தவிர இந்தியர்கள் இங்கு ஃபீஜியர்களாக வாழ்வதுதான் அரசியல் ரீதியில் நல்லது. இந்திய உணர்வுக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பது அவர்களை வித்தியாசப்படுத்துவது மட்டுமல்லாமல் குழப்பங்களை விளைவிக்கும்" என்றார் தலைமை ஆசிரியர் ரெட்டி.

இங்கு ஒரு வேடிக்கையைக் குறிப்பிட வேண்டும். ஃபீஜி இந்தியர்களிடையே ஜாதி வித்தியாசமே கிடையாது. ஆனால் யாரைச் சந்தித்தாலும் ரெட்டி, நாயுடு, முதலியார், பிள்ளை, நாயக்கர் என்று சொல்வார்கள்! உண்மையில் பலர் அந்த வகுப்பைச் சேர்ந்தவர்களாகக்கூட இருக்கமாட்டார்கள்!

"இங்கே கல்வித் தரம் மாணவர்களின் தரம் எப்படியிருக்கிறது?" என்று ரெட்டியைக் கேட்டேன்.

"நியூஜிலாந்து ஆஸ்திரேலியாவுடன் ஒப்பிடும் தரமாகத்தான் இருக்கிறது. இந்திய மாணவர்கள் ஃபீஜி மாணவர்களைவிட சுட்டிகையானவர்கள். ஆனால் கொஞ்ச காலமாகப் படிப்பில் அவர்களுக்குச் சிரத்தையே இல்லாமல் போய்விட்டது" என்றார் ரெட்டி.

"ஏன்?"

"எப்படிப் படித்தாலும் நல்ல எதிர்காலம் கிடையாது என்கிற சோர்வினால்!"

"அது எப்படி?"

"சுதந்திரம் வந்தபின் ஃபீஜியரின் ஆட்சியில், எல்லாச் சலுகைகளும் இயல்பாக ஃபீஜியருக்குச் சென்றுவிட்டது. ஒருவகையில் அது நியாயமானதுதான். ஏனென்றால் இந்தியருடன் ஒப்பிடும்போது ஃபீஜி சமூகம் பின்தங்கிய சமூகம். ஆனால் இந்தக் கொள்கை மாற்றம் இந்திய இளைய தலைமுறையினரை வெகுவாகப் பாதிக்கும். சர்வகலாசாலையிலும் வேலை வாய்ப்புக்களிலும் அறுபது சதவீதத்துக்கு மேல் ஃபீஜியருக்குத்தான் முதல் சலுகை. ஜனத் தொகையில் 51% இந்தியர்கள் இருந்தாலும் இந்தியர்களின் எதிர்காலம் இப்பொழுது ஒரு பெரிய கேள்விக் குறி."

ரெட்டியின் கண்களில் ஆழமான கவலையுடன் ஒரு சங்கடமும் தெரிந்தது. அந்தச் சங்கடத்துக்குக் காரணமும் இருந்தது. ரெட்டி விளக்கினார்:

"ஃபீஜியர்கள் சுபாவத்தில் மிக நல்லவர்கள். கூட்டுறவாக வாழும் மரபு கொண்ட அவர்களிடம் எதேச்சாதிகாரம், அடக்குமுறை என்கிற குணங்கள் எல்லாம் கிடையாது. அவர்களது வாழ்க்கை முறையிலேயே பொருள் சேர்த்து வாழும் லௌகீகப் பற்றுக்கு இடமில்லை. ஆனால் இப்பொழுது அரசியல் அவர்கள் வாழ்க்கையில் புகுந்ததும் அவர்களது பார்வை மாற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது."

மறுநாள் காலை ஃபீஜியின் சுதந்திரத்துக்காகவும் இந்தியர்களின் உரிமைகளுக்காகவும் மிகத் தீவிரமாகப் போராடிய வீரர் ஆர். டி. பட்டேலை அவருடைய இல்லத்தில் சந்தித்தேன். அவருடைய பேச்சைக் கேட்ட பிறகு ஃபீஜி வாழ் இந்தியர்களைப் பற்றின அவரது ஆத்மார்த்தமான ஆழ்ந்த கவலை என்னையும் பற்றிக் கொண்டது.

(தொடரும்)

"எந்தக் கூட்டமானாலும் எங்கப்பா தான் முதலில் பேசுவார்."

"ரொம்ப முக்யமானவரா?"

"ரொம்ப முக்யமானவரா?"

"ஆமாம். மைக் செட்டுக்காரர்."

— இளை. அ. கதிர்வேல்.



# வேதாளம் சொன்ன தேர்தல் கதை

சுப்ரா



வாபஸ் வாங்கும் கடைசி நாளும் வந்து சேர்ந்தது. அன்று மாலை கிடைத்த செய்தி எக்காளப்பட்டி முழுவதுமே பெரும் வியப்பை உண்டாக்கி விட்டது...



பாராளுமன்றம், சட்டசபை, மேல் சபை, அவை தவிர அவ்வப்போது இடைத் தேர்தல்கள் என்று ஏதாவது ஒரு தேர்தல் நடந்து கொண்டே இருக்கும்.

ஆயினும் திடீரென்று எதிர்பாராத ஒரு தேர்தல் வந்தது. பஞ்சாயத்துத் தேர்தல் என்று பெயர். பாராளுமன்றத்திற்கும், சட்டமன்றத்திற்கும் போகச் சந்தர்ப்பம் கிடைக்காத அரசியல்வாதிகளுக்காகவே உருவாக்கப்பட்ட தேர்தல்.

வெகு காலமாக நடைபெறாமலே இருந்து திடீரென்று பஞ்சாயத்துத் தேர்தல் வந்ததும் தமிழ்நாடு திருவிழாக் கோலம் பூண்டது. தேர்தல் காலச் சுறுசுறுப்பில் கலகலப்பானது. பலவிதக் கொடிகள் பறக்கவிடப்பட்டன. எல்லாச் சுவர்களும் வெள்ளை அடிக்கப்பட்டுத் தேர்தல் கோஷங்கள் எழுதப்பட்டன. சாலைகளில் வாகனங்கள் கொடிகளோடு விரைந்தன. ஒலி பெருக்கிகள் ஒன்றோடு ஒன்று மோதிக் கொண்டன.

வெவ்வேறு கட்சிகளின் வேட்பாளர் பட்டியல்கள் வெளியாக ஆரம்பித்தன. இடம் நிச்சயமானவர்கள் போஸ்டர்கள் ஒட்ட ஆரம்பித்தார்கள். மக்களைச் சந்தித்து ஓட்டு கேட்க ஆரம்பித்தார்கள். மற்றவர்கள் தங்கள் பெயர் வெளியாவதற்காகக் காத்திருந்தார்கள்.

தேர்தல் சமயங்களில் மட்டுமே உருவாகும் கூட்டணிகளில் உள்ள கட்சிகளுக்கிடையே தொகுதி ஒதுக்கீட்டின் காரணமாக வேட்பாளர் பட்டியல் வெளியாவது தாமதமாயிற்று. அதன் காரணமாக நிறையப் பேரின் இரத்த அழுத்தமும் அதிகமாயிற்று.

ஆனால் அந்தப் பரபரப்பினால் எந்தவிதத்திலும் பாதிக்கப்படாமல் இருந்தார் ராமசாமி. எக்கானப்பட்டி யூனியன் தலைவர் பதவிக்குத் தன் கட்சி வேறு யாரையும் நிறுத்தாது என்று அவருக்குத் தெரியும்! ராமசாமி அந்த வட்டாரத்தில் மிகவும் பிரபலமான ஆளுங் கட்சிப் பிரமுகர். வேட்பு மனுத் தாக்கல் செய்துவிட்டு, தேர்தல் வேலைகளில் கவனம் செலுத்த ஆரம்பித்தார்.

எதற்கும் இருக்கட்டுமே என்று ஒவ்வொரு கட்சியும் 'மாற்று' வேட்பாளராக ஒருவரை நிறுத்தும். ராமசாமிக்கு மாற்று கூடக் கிடையாது. அந்த அளவிற்கு நிச்சயமாக்கப்பட்ட இடம் அவருடையது.

பிரதான எதிர்க்கட்சி அவரை எதிர்த்து அறிவுத் தம்பியை நிறுத்தியது. அறிவுத் தம்பி எம்.ஏ. முடித்த இளைஞர். கட்சியில் தீவிரப் பற்று உடையவர். அவருக்கு மாற்றாக இன்னொருவர்.

அப்புறம் இன்னொரு தேசியக் கட்சியும் ஒருவரை நிறுத்தியது. அவருக்கும் ஒரு மாற்று.

வேட்பு மனுத் தாக்கல் செய்யும் கடைசி நாளும் முடிந்தது. எக்கானப் பட்டியில் மும்முனைப் போட்டி உறுதியாயிற்று. இரண்டு மாற்று வேட்பாளர்களும் வழக்கம் போல

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கி அவன் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து, "மன்னனே! நீ என்ன வேலை செய்து வெற்றி அடையப் போகிறாய் என்பது எனக்குத் தெரியாது. ஒரு சிலர் மிகவும் கஷ்டப்பட்டுத் தாம் அடைந்ததைக்கூட எளிதில் விட்டு விடுகிறார்கள். இதற்கு உதாரணமாக ஒரு கதை கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

தமிழ்நாடு என்ற தேசத்தில் பலவிதமான தேர்தல்கள் நடைபெறுவது வழக்கம்.

# முன்யோசனை இல்லாத அரசு!

மதுரை — பெரியகுளம் சாலை மிகவும் பிரதானமான சாலை. இந்தச் சாலை பெரியகுளம் ஊருக்குள் நுழையும் போது, ஆங்கிலேயர்களால் கட்டப்பட்ட பழைய பாலம் ஒன்று குறுக்கிடுகிறது. அது மிகவும் பழுதடைந்து விட்டதால் அதன் அருகிலேயே புதிய பாலம் ஒன்று கட்டி முடிக்கப்பட்டுக் கடந்த இரண்டு வருடங்களாகவே திறக்கப்படாமல் இருக்கிறது. (இரண்டு பாலங்களும் படத்தில்) காரணம், அந்தப் பாலத்தின் ஒரு பக்கமுள்ள இணைப்புச் சாலையைத் தனியார் ஒருவரின் நிலத்தில்தான் போட வேண்டுமென்பதால், அவர் நீதிமன்றத்திற்குச் சென்று தடையுத்திரவு வாங்கியிருக்கிறாராம். எப்படி நம் அரசின் முன் யோசனை? நினைக்க நினைக்கப் புல்லரிக்கிறதல்லவா!

— நமது நிருபர்.

விலகிக் கொள்வதாகத் தீர்மானமாயிற்று.

ராமசாமிக்குத் தமிழரசி என்று ஒரு மகள். அறிவுத் தம்பியோடு ஒன்றாகப் படித்தவள். படிக்கும்போதே இருவரும் காதலிக்கத் தொடங்கினார்கள். படித்து முடித்ததும் அறிவுத் தம்பி அரசியலில் இறங்கியதில் தமிழரசிக்குச் சந்தோஷம். தந்தை அரசியல் வாதியாதலால், ஓர் அரசியல்வாதியையே கணவனாக அடைய வேண்டும் என்று விரும்பினாள். ராமசாமிக்கும் அவர்கள் காதல் பற்றி ஓரளவுக்குத் தெரியும்.

தன் தந்தையை எதிர்த்து அறிவுத் தம்பி தேர்தலில் நிற்பது தெரிந்ததும் தமிழரசி வருத்தப்படத்தான் செய்தாள். ராமசாமி வெற்றி பெற்றுவிடுவார் எனத் தெரியும். அறிவுத் தம்பியின் அரசியல் வாழ்வில் ஓர் அனுபவமாக இருந்துவிட்டுப் போகட்டும் என்று நினைத்தாள்.

ராமசாமியும் கவலையில்லாமல்தான் இருந்தார். ஆனால் தேர்தல் நாள் நெருங்க நெருங்க இலேசாகக் கவலைப்பட ஆரம்பித்தார். அறிவுத் தம்பி இளைஞன். எதிர்க் கட்சி மட்டுமில்லாமல் மற்ற கட்சி இளைஞர்களும் அவனை ஆதரிக்க ஆரம்பித்துவிட்டால் என்ன செய்வது என்ற பயம். இளைஞர் ஓட்டுகளும், நடுநிலை ஓட்டுகளும் அறிவுத் தம்பிக்குப் போய் விட்டால் தாம் தோற்று விடுவோமோ என்று அஞ்சினார்.

அந்தத் தேர்தலின் முக்கிய அம்சம், ஐந்து பேரில் அறிவுத் தம்பி தவிர மற்ற நால்வரும் ஒரே ஜாதி. தேசியக் கட்சி வேட்பாளர் ஜாதி ஓட்டுக்களை பிரித்துவிட்டால் தமக்கு ஓட்டு குறையலாம் என்ற பயம் வேறு.

எப்படியாவது அறிவுத் தம்பியை விலக்கி விட்டால் நல்லது என கணக்குப் போட்டார். தமிழரசியைத் தூது அனுப்பினார். அறிவுத் தம்பி விலகாவிட்டால் அவனை மறக்க வேண்டியதுதான் என்றார்.

தமிழரசி நேராக அறிவுத் தம்பியிடம் போனாள். தந்தையின் மிரட்டலைச் சொன்னாள். ஆனால் அறிவுத் தம்பி மறுத்துவிட்டான்.

தமிழரசி வெகு நேரம் பேசிப் பார்த்தாள். அறிவுத் தம்பி ஆளுங் கட்சியின் மோசமான ஆட்சியைப் பற்றி தேர்தல் பிரச்சாரப் பாணியில் பேச ஆரம்பித்ததும் மனமொடிந்து விட்டாள். ராமசாமி தேர்தலில் இருந்து விலகாவிட்டால் தன்னை மறந்துவிடும்படி பதில் மிரட்டலை வெளியிட்டான் அறிவுத் தம்பி.

தமிழரசி தன் தந்தையிடம் எல்லாவற்றையும் சொன்னாள். ராமசாமி விலக முடியாது என்று கூறிவிட்டார். வேற்று ஜாதிக்காரனோடு என்ன உறவு என்று திட்டினார். தேர்தலில் தோற்றதும் அவன் திமிர் அடங்கி விடும் என மகளைச் சமாதானப்படுத்தினார்.

தமிழரசி அறிவுத் தம்பியைச் சந்தித்துக் காதலைவிட தந்தை மேல் உள்ள பாசமே பெரிது என்று சொல்லிவிட்டாள்.

இந்தச் சம்பவங்கள் எல்லாம் எக்காளப் பட்டி மக்களுக்குத் தெரியாது. வேட்புமனுவை வாபஸ் வாங்கும் கடைசி நாளும் வந்து சேர்ந்தது. அன்று மாலை கிடைத்த செய்தி எக்காளப்பட்டி முழுவதுமே பெரும் வியப்பை உண்டாக்கிவிட்டது.

ராமசாமி, அறிவுத் தம்பி இருவருமே தேர்தலில் இருந்து விலகிவிட்டிருந்தார்கள். தேசியக் கட்சியின் மாற்று வேட்பாளர் ஏற்கெனவே விலகிவிட்டதால் கடைசியில் எதிர்க் கட்சியின் மாற்று வேட்பாளராக இருந்தவருக்கும் தேசியக் கட்சியின் வேட்பாளருக்கும்தான் போட்டி நடந்தது.

வேதாளம் இக்கதையைக் கூறி, "மன்




# வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்

## போட்டி: 45

காதல் என்பது ஒரு வேடிக்கையான விஷயமே அல்ல. ஒன்று அளப்பரிய மகிழ்ச்சி தரும்; அல்லது ஆழ்ந்த சோகத்தை அளிக்கும். இருந்தாலும் காதலன் — காதலியை வைத்து உலகம் முழுவதும் எத்தனை எத்தனை ஜோக்குகள்! காதலைப் பரிகசிப்பதில், காதலர்களைக் கிண்டல் பண்ணுவதில் எல்லோருக்குமே ஒரு அலாதி ருசி. எங்கே நீங்களும் ஒரு காதல் ஜோக் எழுதுங்கள் பார்க்கலாம். 'சொந்தக் கற்பனை' என்று குறிப்பிட்டுக் கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப் பக்கத்தை முழுவதுமாகக் கத்திரித்து அனுப்பும்போது உறை மீது, 'காதல் ஜோக்' என்று குறிப்பிடவும். பிரசுரமானால் பரிசு. ஒருவருக்குக் குலுக்கல் முறையில் வி. ஐ. பி. ஸூட்கேஸ். முக்கியக் குறிப்பு: மேலே உள்ள படத்துக்கு ஏற்றபடி உங்கள் ஜோக் அமைய வேண்டிய அவசியமில்லை.

**முடிவு தேதி: 24.3.86**

**நினைவிருக்கட்டும். இன்னும் 8 வி. ஐ. பி. ஸூட்கேஸ்களே பாக்கி. எட்டு வாய்ப்புக்களில் ஒன்றைக் கூடத் தவற விடாமல் எல்லாப் போட்டிகளிலும் பங்கு பெறுங்கள்!**

என் பெயர்: ....................

விலாசம்: ....................

....................

னையே! தன் மகளின் காதலுக்காகப் போட்டியில் இருந்து விலகிய ராமசாமி, காதலிக்காக விலகிக் கொண்ட அறிவுத் தம்பி, தந்தை மீதுள்ள பாசத்தால் காதலைத் தியாகம் செய்த தமிழரசி. இவர்களில் யாருடைய தியாகம் உயர்ந்தது? இந்தக் கேள்விக்குப் பதில் தெரிந்திருந்தும் நீ கூறவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமன் அடக்க முடியாமல் சிரிக்க ஆரம்பித்தான்.

''தியாகமாவது கத்திரிக்காயாவது? மூவரின் செயலுக்கும் வெவ்வேறு காரணங்கள் உண்டு. ஆளும் கட்சியின் தலைவர்கள் கடைசியில் சில நிர்ப்பந்தங்களால் தேசியக் கட்சியோடு கூட்டு வைக்க முடிவு செய்துவிட்டார்கள். சில தொகுதிகளை தேசியக் கட்சிக்கு விட்டுக் கொடுக்க வேண்டிய நிலைமை. எக்காளப்பட்டியும் அதில் ஒன்று.

''கூடிய சீக்கிரமே ராமசாமியை எம்.எல்.சி. ஆக்கி, முடிந்தால் மந்திரி பதவியும் தருவது என்ற செய்தியோடு தலைவர் தூது அனுப்பினர். ராமசாமியும் லாப நஷ்டங்களைக் கணக்கிட்டு, மறு பேச்சு இல்லாமல் விலகிக் கொண்டுவிட்டார்.

எதிர்க் கட்சியின் தலைமையிடத்திற்குக் கடைசி நேரத்தில்தான் முக்கியமான செய்தி ஒன்று கிடைத்தது. அறிவுத் தம்பியின் ஜாதி அந்தத் தொகுதியில் மிகக் குறைவு. மாற்று வேட்பாளரால்தான் ஜாதி ஓட்டுகளைப் பெற முடியும். கேவலம், ஜாதியைக் காரணமாக வைத்துத் தங்கள் கட்சி வெற்றி வாய்ப்பை இழந்துவிடக் கூடாதே என்று நினைத்து அறிவுத் தம்பியை விலகிக் கொள்ளும்படி செய்தி வந்தது. இளமைத் துடிப்பில் அறிவுத் தம்பி மறுத்தான். தொடர்ந்து சற்றே மோசமான மிரட்டல் வந்தது. அறிவுத் தம்பி புத்திசாலி. கை, கால் சேதமடைவதை விரும்பாமல் விலகிக் கொண்டான்.

ஆளுங்கட்சியை விட்டுவிட்டு பிடிவாதமாக எதிர்க் கட்சி மீது பற்று வைத்திருக்கும் அறிவுத்தம்பி போன்றவர்களால் அரசியலில் காலந்தள்ள முடியாது என்று தெரிந்த தமிழரசி தன் மனத்தை மாற்றிக்கொண்டாள். பேசாமல் தன் தந்தையின் கட்சியில் உள்ள ஏதாவது ஓர் இளைஞனையே திருமணம் பண்ணிக்கொண்டால் வருங்காலம் வளமாக இருக்கும் என்று நினைத்துத்தான் அறிவுத் தம்பியின் காதலை உதறிவிட்டாள்.

''மொத்தத்தில் மூவருக்குமே தியாகம் பற்றியெல்லாம் எதுவும் தெரியாது. உண்மையில் தியாகம் பண்ணுபவர்கள் எக்காளப்பட்டி மக்கள்தான். இவர்களையெல்லாம் நம்பி நாட்டையும், எதிர் காலத்தையும் ஒப்படைக்கிறார்களே. அதனால்'' என்றான் விக்கிரமன்.

விக்கிரமனின் பதிலைக் கேட்டதும் ஆடிப் போய்விட்டது வேதாளம். வழக்கம் போல விக்கிரமனது மௌனம் கலைந்ததும் அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பி மீண்டும் மரத்தில் ஏறிக் கொண்டது வேதாளம்!

சாண்டில்யன்

# சித்தரஞ்சனி

## 32

### இருவர் திட்டங்கள்

சித்தரஞ்சனியை அவள் புரவியிலிருந்து தூக்கித் தனது புரவியில் தனக்கு முன்பாக உட்கார வைத்துக் கொண்டும், இடது கையால் அசுரத்தனமாக அவளை அணைத்துக் கொண்டும், வலது கையால் புரவியின் கடிவாளங்களை இழுத்தும் தளர்த்தியும் கொடுத்துக் கொண்டும் சாதவாகனன் சென்றதையும், அரசகுமாரியின் புரவி கடிவாளம் நிலத்தில் புரண்டு வரச் சாதவாகனன் புரவிக்கு ஈடு கொடுத்து ஓடியதையும் இரண்டொரு விநாடிகளே பார்த்த க்ஷத்ரபன், யவனனுடன் மலைப்பகுதியின் வேறு பகுதிக்குச் சென்று விட்டானானாலும், அவன் எண்ணம் மட்டும் தனது வளர்ப்பு மகளையும் அவளைத் தூக்கிச் சென்ற புது மாப்பிள்ளையையும் சுற்றியே சுழன்று கொண்டிருந்ததால், பக்கத்தில் அந்த யவனனுக்கு அரைகுறையாகவே பதில் சொல்லிக் கொண்டு நடந்தான்.

சென்ற நாட்களில் நடந்த நிகழ்ச்சிகளுள் நாகபாணன் திட்டங்களில் எத்தனை திருப்புமுனைகள் ஏற்பட்டுவிட்டன என்பதை நினைத்து வியப்புக் கடலில் மூழ்கியிருந்தான் க்ஷத்ரபன். சித்தரஞ்சனியின் இனிமைக் குரலை உபயோகப்படுத்தி அவளைப் பிசாசாக்கித்தாபோல் மலைவாசிகளை வெளியேறச் செய்து அந்த மலைப்பகுதியைத் தங்கள் படைகளால் ஆக்ரமித்து, அங்கு தளம் அமைக்கத் திட்டமிட்ட மகாக்ஷத்ரபரின் திட்டம் தவிடு பொடியாகிவிட்டதை உணர்ந்த க்ஷத்ரபன், "சித்தரஞ்சனியை நாங்கள் பிசாசாக்கி மலைவாசிகளை விரட்டினோம். ஆனால் அந்தப் பிசாசையே காதலியாக்கிக் கொண்டு மலைவாசிகளைத் திரும்பவும் வரவழைத்தான் சாதவாகனன். உதவிக்காக மற்ற மரக்கலங்களும் அதிக வீரர்களும் வந்தார்கள் நமக்கு. சாதவாகனனோ தனது படைப் பிரிவு ஒன்றை வரவழைத்து அவற்றைக் கொண்டே மலைவாசிகளையும் வீரர்களாக்கிவிட்டான். இவன் வந்த நாளிலிருந்து மகாக்ஷத்ரபருக்கு உறக்கமில்லை. எனக்கும் தொல்லை" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். இதற்கிடையே தான் சித்தரஞ்சனிக்காக ஏற்பாடு செய்திருந்த காஷ்டானன் எதிரியின் படைத் தலைவனாகிவிட்டதை நினைத்து, "சீ! வெட்கங்கெட்டவன்" என்று அவனைத் தூற்றினான். "காஷ்டானன் மானமுள்ளவனாயிருந்தால் தனக்கு மனைவியாகப் போகிறவளை ஸ்வீகரித்துக் கொண்ட எதிரியிடம் கடைசி வரை போரிட்டு மடியவல்லவா வேண்டும்?" பழைய மாப்பிள்ளையைக் கண்டிக்கவும் செய்தான்.

இந்தக் கடைசி வார்த்தைகளை க்ஷத்ரபன் சற்று வாய்விட்டுச் சொல்லவே, அவன் பக்கத்தில் நடந்து கொண்டிருந்த யவனன் கேட்டான், "யார் எதற்காக மடிய வேண்டும்?" என்று.

"காஷ்டானன்." என்றான் சலிப்புடன் க்ஷத்ரபன்.

"எதிரியின் படைத் தலைவனா?" என்று கேட்டான் யவனன்.

"ஆம்."

"அவன் சாக வேண்டுமென்றால் போரில் தானே சாக வேண்டும்?"

"இல்லை, தற்கொலை செய்து கொள்ளலாம்."

"எதற்காக?"

"அவனுக்கு மனைவியாக வேண்டியவள் இன்னொருத்தனிடம் போய்விட்டாள்."

"அதனாலென்ன? அவளுக்கு இவரிடம் பற்றில்லாதிருக்கலாம். இது ஒரு பெரிய விஷயமா?"

க்ஷத்ரபன் உடனடியாகப் பதில் சொல்லவில்லை. கடைசியில், "யவனரே! நீர் நினைப்பதுபோல் அத்தனை அல்ப விஷயமல்ல" என்று சொன்னான்.

"ஏனில்லை! கேவலம் பெண் விஷயந்தானே? ஒருத்தி போனால் இன்னொருத்தி கிடைக்கிறாள். அவள் போனால் என்ன? ராஜ்யமா போய்விட்டது?" என்று சர்வ சகஜமாகப் பேசினான் யவனன்.

"ஒரு பெண் நம்மைவிட்டுப் போனால் ராஜ்யமல்ல சாம்ராஜ்யமே போய்விட்டது போலத்தான்" என்றான் க்ஷத்ரபன்.

"பெண் அனுபவப் பொருள். ஒன்று போனால் வேறொன்று கிடைக்கும். அதற்காகப் பிராணனையா விட முடியும்?" என்று யவனன் கேட்டான்.

க்ஷத்ரபன் சிறிது சிந்தித்துவிட்டு, "உங்கள் நாட்டில் ஹெலன் என்ற பெண்ணுக்காகப் பெரும்போரே நடந்ததாமே?" என்று வினவினான்.

"நடந்தது. அதைவிட முட்டாள்தனம்



வேறில்லை. எத்தனை பேர் சாவு?'' என்று அலுத்துக் கொண்டான் யவனன்.

அவன் தத்துவத்தை நினைத்து வியந்தான் க்ஷத்ரபன். பெண்ணுக்கு அதிகமகத்துவத்தை அளிப்பது தவறு என்ற யவனன் எண்ணம் அனைவருக்கும் இருந்தால் எத்தனை போர்கள் தவிர்க்கப்பட்டிருக்கும் என்றும் சிந்தித்தான். என்ன சிந்தித்தாலும் பெண் இனத்தை இழிவாக நினைக்க வராததால் மேற்கொண்டு பேச இஷ்டப்படாத க்ஷத்ரபன், "யவனரே! வாரும், உமது படைகளைப் பார்வையிடுவோம்'' என்று அவனை அழைத்துத்தாபோல் மலையின் வடக்குப் பகுதிக்குச் சென்றான்.

மலையின் சரிவுகளிலும் குகைகளிலும் பாசறை அமைத்துத் தங்கியிருந்த யவன வீரர்கள் சுமார் இரண்டாயிரம் பெயரைப் பார்த்தான். பயங்கரமான வாள்களும், வேல்களும் அக்கம்பக்கத்திலிருக்கப் படுத்துக் கிடந்த அந்த இரண்டாயிரம் வீரரும், எந்த நிலையிலும்போராடக்கூடியவர்கள் என்பதை உணர்ந்த க்ஷத்ரபன், தங்கள் வெற்றியில் சிறிது நம்பிக்கையும் கொண்டான். இந்த இரண்டாயிரம்வீரர்களும்தங்களிடமிருக்கும் மூவாயிரம் வீரர்களும் இணைந்தால் வலு மிக அதிகமென்று தீர்மானித்தாலும் சாதவாகனன் போர்த் தந்திரம் எப்படியிருக்குமென்பது புரியாததால் வெற்றி பற்றிச் சிறிது சந்தேகமும் கொண்டான்.

இப்படி அவன் சிந்தனையில் இறங்கியிருந்த சமயத்தில் நாகபாணனும் கோட்டையில் அடுத்துவரும்போரைப்பற்றிச்சிந்தாக்கிராந்தனுயிருந்தான். யவனர்களும் சாகர்களும் கொண்ட தனது படை பலத்தைப் பற்றி அவனுக்குச் சிறிதும் சந்தேகமில்லை. அஞ்சன்வேல் கோட்டையிலிருந்து படகுகள்

"இந்திரஞ்சனி! நீதான் இந்தத் தாபோல் மது என்று வைத்துக் கொள். இதுதான் எனது போர்த் திட்டம்" என்று அவள் அழகிய சரீரத்தில் திருஷ்டித்துக் காட்டினான்.

மூலம் மூவாயிரம் போர் வீரரை முகத் துவாரத்தில் இறங்கச் செய்துவிட்டு, யவனர் படையை மலையின் வடக்குப் பகுதியிலிருந்து குறுக்கே வரவிட்டால் இரண்டுக்கும் இடையில் சாதவாகனன் படைகளைச் சிக்க வைக்கலாமென்று தீர்மானித்தான். அப்படி முகத் துவாரத்திலிருந்து மலைமேல் ஏறிச் செல்லும் படையையும் மலை மீதிருந்தே குறுக்கே வரும் யவனர் படையையும் ஏக காலத்தில் சமாளிப்பதானால் இருபுறத்திலும் சாதவாகனன் போராட வேண்டியிருக்குமென்றும், அப்படி போராடினால் அவன் படை இரண்டாகப் பிரிய நேரிடுமென்றும் கணக்குப்போட்டான் நாகபாணன். அப்படி ஏற்படும்போது தான் ஒரு சிறிய படையுடன் மலையின் மேல்புறத்திலிருந்து இறங்க முடியுமானால் சாதவாகனனை முறியடிக்கலாம்'' என்று தீர்மானித்தான். இப்படியொரு திட்டத்தை வகுத்துக் கொண்டதால் சற்று மன நிம்மதியுடன் படுக்கையில் புரண்டான் மகாக்ஷத்ரபன்.

அந்த இரவில் சாதவாகனனும் புரண்டான். பஞ்சணை மீதல்ல, கருங்கல் தரையில். கரடு முரடான ஒரு மலைப் பாறையில். அருகேயிருந்த சித்தரஞ்சனியை அவன் கைகள் அழுந்தப் பிடித்திருந்தன. அந்தக் கட்டழகியின் சரீரத்தைக் கட்டாந்தரை துன்புறுத்தாதிருப்பதற்காகவோ என்னவோ அவன் உடலைத்தனது மார்புமீதுதூக்கிப்போட்டிருந்தான் கௌதமிபுத்ரன். அவள் அவன் மார்பு மீது செயலற்றுக் கிடந்தாள். ''சித்தரஞ்சனி'' என்று மெதுவாக அழைத்தான் சாதவாகனன்.

''ஏன்?'' என்றாள் சித்தரஞ்சனி மிக மெதுவாக.

''மரக்கட்டை போலிருக்கிறாயே?'' என்றான் சாதவாகனன்.

''இரும்பைக்கூட வளைக்க நீங்களிருக்கிறீர்களே.....'' என்றாள் அவள்.

''இரும்பை வளைக்கலாம்; மரக்கட்டையை வளைக்க முடியாது'' என்றான் சாதவாகனன்.

அவள் மெதுவாக நகைத்து அவன் மார்பு மீது கிடந்தபடியே தனது கைகளால் அவனது கழுத்தை வளைத்தாள். அவன் கைகளும் அவளைச் சுற்றி வந்தன. அந்த நிலையில் அவள் கேட்டாள் ''மரக்கட்டையில் கொடி முளைக்குமா?'' என்று.

''மரக்கட்டையைக் கொடி வளைக்கும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்'' என்றாள் சித்தரஞ்சனி.

''கொடி தொத்தி ஏறக் கொழுக்கொம்பு வேண்டுமென்பது பழைய கதை; பழைய நியாயம். மரக்கட்டையே மலர்க் கொடியாக மாறுவது புதுக் கதை; புது நியாயம்'' என்ற சாதவாகனன், கழுத்தைச் சுற்றிய அவள் கைகளைத் தடவினான்.

அவள் உணர்ச்சி வெள்ளத்தில் மிதக்கத் தொடங்கினாள். அவன் கைகள் சோதித்த இடங்கள் அவளை நிலைகொள்ளாது அடித்தன. அவள் இருமுறை முனகினாள். சற்று அவன் உடல்மீது தவழ்ந்து அவன் காதுக்

---

# சம்பளத்திற்காக ஒரு போராட்டம்

ஏறத்தாழ இருபது வருஷ சர்வீஸ்காரருக்குத் தொடர்ந்து பதினைந்து மாதங்கள் சம்பளத்தைக் 'கட்' பண்ணினால் எப்படியிருக்கும்? பொதுப்பணித்துறை ஊழியரான ராஜகோபாலனுக்குத்தான் இப்படியொரு கதி. அங்குமிங்கும் டிரான்ஸ்பர் ஆகி 78ல் மதுரைக்கு டிரான்ஸ்பர் ஆனார் ராஜகோபாலன். யூனியனில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார். பார்த்தது நிர்வாகம். திடீரென்று எட்டுப் பக்க 'மெமோ' வந்து பெரியார் நீர்ப்பாசனத் துறைக்கு மாற்றப்பட்டார். அடுத்து வறட்சி நிவாரணப் பணிக்கு மாற்றினார்கள். 83 அக்டோபர்வரை வேலை. அப்புறம் 'வைகை பிராஜெக்ட்'டுக்கு மாற்றப் போவதாக அறிவித்ததும், ராஜகோபலன், 'உண்ணாவிரதம் இருக்கப் போவதாக' அறிவித்தார். கோர்ட்டில் எதிர்த்துக் கேஸ் போட்டார். அதிலிருந்து ஆரம்பித்தது பிரச்னை. 83 நவம்பரிலிருந்து வேலை இல்லை. சம்பளமும் இல்லை. எதிர்த்துப் போராடினார். இவர் போட்ட கேஸும் தோற்றுப் போய்விட்டது. கடைசியில் இஞ்ஜினியர்களிடம் பேசி, பொதுப் பணித் துறையின் 'அசிஸ்டெண்ட்' வேலை கிடைத்தது 85 பிப்ரவரியில்.

''பதினைந்து மாதங்கள்வரை சம்பளம் வாங்காமல் தவிச்சுப் போயிட்டேன். இங்கே ஆபீஸில் சேர்ந்த பிறகு சம்பளத்தைக் கேட்டுப் பொதுப்பணித்துறை ஆபீஸ் முன்னாலே உண்ணாவிரதம் இருந்தேன். யார் யாருக்கெல்லாமோ மனு எழுதி, நேரடியாப் பார்த்து, போராடி ஒன்றும் பிரயோஜனமில்லாமப் போச்சு. இந்த மாதிரி பண்றாங்களே சார்'' என்கிறார் ராஜகோபாலன் நெகிழ்ந்தபடி.

பிரும்மச்சாரியான இவர் போராட்டம் நடத்தின போஸ்டர்களைக் காண்பிக்கிறார். நான்கைந்து வகைவகையான போஸ்டர்கள். போஸ்டர்க்கான செலவே ஒரு மாதச் சம்பளமாகிவிடும் போலிருக்கிறது. இவருக்கு மறுபடியும் 'ட்ரான்ஸ்பர்' மாதிரியான பிரயோகமில்லாமல், பிரயோஜனமாய் என்ன செய்யப்போகிறது பொ. ப. துறை!

— நமது நிருபர்





பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் 1542—ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் கும்பகோணம் "ராஜா வேத காவ்ய பாடசாலை"யை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 75 மாணாக்கர்கள் வேதாத்யாயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒருநாள் உணவளிக்க சுமார் 200/— ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 2000/— மூலதனம் ஏற்படுத்தியோ (அ) அவ்வப்போது ரூ. 200/— அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் சமாராதனை நடத்தும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடைக்கு 80—G விதியின்படி வருமானவரி விலக்கு உண்டு.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்:

அத்வைத வித்யாசார்ய மஹாராஜ ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,
D-76, 3வது கிராஸ், ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம்—612 001.

# "ஒரு ரூபா கொடுத்தாத்தான் ஒரு கொடம் தண்ணீர்!"



சில மாதர் சங்கங்களுக்கு எவ்வளவு ஆவேசமிருக்கிறது? மதுரையை விட்டு 2 கி. மீ. தொலைவில் உள்ள நேரு நகரில் — அந்தப் பகுதிப் பெண்களைச் சந்தித்த போது — "உடனே எங்கள் ஏரியாவைப் பார்க்கலாம் வாங்க" என்று அழைத்துப் போனார்கள். ஏதோ மாதர் சங்க ஊர்வலத்திற்குத் தற்செயலாகத் தலைமை ஏற்க நேர்ந்தவர்கள் போல நாம் முன்னால் போக பின்னால் அநேக மாதர். நேரு நகரை ஒரு சுற்று சுற்றினோம். 750 குடும்பங்கள் இருக்கிற ஏரியா. பாதாளச் சாக்கடை வசதியில்லாததால் ஒவ்வொரு வீட்டின் முன்பும் திறந்த நிலையில் நாற்றமெடுக்கும் சாக்கடை. "தண்ணீர் வசதியே இல்லே. மாநகராட்சி லாரி வருது. ஒரு குடம் தண்ணிருக்கு ஒரு ரூபாய் கொடுக்கிறோம். இரண்டு ரூபாய் கொடுத்தால் இரண்டு குடம் கிடைக்கும். இப்படியே ஒரு வாரத்துக்குக் கிடைக்கிறது 4 குடம்" என்றார் சங்கத்தைச் சேர்ந்த ராஜலஷ்மி கிருஷ்ணன்.

மழை பெய்தால் காலனி மாறிப் போவதைப் பலரும் மாறி மாறிச் சொன்னார்கள். "எம்ப்பா, இவங்க எங்களைக் கவனிக்காதப்ப நாங்க எதுக்கு வீட்டு வரி கட்டணும்!" என்று புலம்பியபடி நம் பின்னால் வந்தார் வயதானவரான செல்லம்மாள். எல்லோருமாய் ஒரு தண்ணீர் டேங்கையும், இரண்டு குழாய்களையும் காட்டினார்கள். "உலகத் தமிழ் மாநாட்டின்போது கட்டினாங்க. ஏதோ கொஞ்ச காலம் வந்துச்சு. இப்போ வர்றதே இல்லே" என்றார்கள். இப்போது திரும்பவும் இவைகள் எல்லாம் இயங்க வேண்டுமானால் இன்னொரு உ. த. மாநாடு வர வேண்டும் போலிருக்கிறது.

— நமது நிருபர்கள். படம்: மனோ.

---

கருகில் தனது உதடுகளைக் கொண்டு சென்று, "பிரபு! நீங்கள் அரண்மனைப் பஞ்சணையில் படுக்க வேண்டியவர். இந்தப் பாறையில் படுத்திருக்கிறீர்களே!" என்றாள்.

அவன் அவள் கழுத்தில் தனது உதடுகளைப் புதைத்து, "சித்தரஞ்சனி! நீ உடனிருந்தால் பாறையும் பஞ்சணையாகும். நீ இல்லாவிட்டால் பஞ்சணையும் பாறையாகும்" என்று சொற்களை உதிர்த்தான். அத்துடன் ஒருமுறை பெருமூச்செறிந்தான். "சித்தரஞ்சனி! ஒரு நாள் ஓடிவிட்டது. இன்னும் பதினாறு நாட்கள். பதினேழாவது நாள் நமக்கு இரு வெற்றிகள்" என்றான்.

"இரண்டு வெற்றிகளா?" தனது உதடுகளை அவனது உதடுகளுடன் இணைத்தாள்.

"ஆம் சித்தரஞ்சனி! இங்கு நான் நாகபாணனைச் சந்திக்கும்போது எனது சேனாதிபதி வஜ்ரபாகு இன்னொரு படைப் பிரிவுடன் வடக்குக் கொங்கணத்தில் நுழைந்து விடுவான். நாகபாணன் ஒரே சமயத்தில் அரசின் இரு பகுதிகளை இழப்பான். பிறகு சிந்து நதிப் பகுதியில் அவனை முறியடிப்பதோ சாக சாம்ராஜ்யத்தை நிர்மூலமாக்குவதோ பெரிய காரியமல்ல" என்று பேசினான்.

சித்தரஞ்சனி பிரமித்தாள். "என்ன திட்டத்துடன் வேலை செய்திருக்கிறீர்கள்?" என்றாள் மகிழ்ச்சியுடன்.

"எதையும் திட்டமில்லாமல் நான் செய்வதில்லை சித்தரஞ்சனி. தாபோல் மலைப் போர் எனது முதல் வெற்றி. பிறகு தொடர்ச்சியாக வெற்றிதான்" என்றான் திட்டமாக.

"இந்தப் போருக்கும் திட்டமிட்டுவிட்டீர்களா?" என்று கேட்டாள் சித்தரஞ்சனி.

"அந்தத் திட்டம் வகுக்கப்பட்டு நாட்கள் பல ஆகின்றன. அதை நிறைவேற்றும் சிறிய பணிதான் பாக்கி" என்றான் சாதவாகனன். அத்துடன் சித்தரஞ்சனியைத் தனது இரு கைகளாலும் தூக்கித் தனக்கு மேலே குழந்தையைப் பிடிப்பது போலப் பிடித்துக்கொண்டு, "அடி சித்தரஞ்சனி! உன்னை சந்தித்த பிறகு எனது புத்தி மிகக் கூர்மையுடன் வேலை செய்கிறது" என்றான்.

அவள் அவனைப் பார்த்தபடி நகைத்தாள். "ராட்சஸனாயிருக்கிறீர்களே? இறக்குங்கள் என்னை" என்று சொன்னாள் நகைப்பின் ஊடே.

அவளை மெதுவாகத் தனது பக்கத்தில் இறக்கிவிட்டுத்தான் எழுந்து உட்கார்ந்தான். பிறகு அவள் உடலைத் தலையிலிருந்து கால் வரை தடவிக் கொடுத்து, "சித்தரஞ்சனி! நீதான் இந்தத் தாபோல் மலை என்று வைத்துக்கொள். இதுதான் எனது போர்த்திட்டம்" என்று கூறிவிட்டுத் திட்டத்தை அவள் அழகிய சரீரத்தில் சிருஷ்டித்துக் காட்டினான்.

எத்தனை நுட்பமாக அவன் போர்த் திட்டத்தை வகுத்திருக்கிறான் என்பதை அறிந்த சித்தரஞ்சனி அவன் புத்திக் கூர்மையை வியந்தாள். இப்படியொரு புருஷன் தனக்குக் கிடைத்ததைப் பற்றிப் பெரு மகிழ்ச்சியும் நியாயமான கர்வமும் கொண்டாள். அவள் படுத்தபடியே கேட்டாள், "நான் தாபோல் மலையென்றால் என் மீதா போர் நடக்கப் போகிறது?" என்று வினவினாள். நாணப் புன்முறுவல் காட்டினாள். அவன் நகைத்துவிட்டுச் சொன்னான் "இந்தப் போருக்கு பிறகு அது. அதுவும் தர்மப் போர்தான். அறத்தின் வழியில்தான் நடக்கும்" என்று. அத்துடன் அவளைப் பார்த்து, "இன்று நீ பேச்சுக் கொடுத்து என் ஆணையைக் காப்பாற்றிவிட்டாய். நீ உத்தமி" என்றான் சாதவாகனன். அவன் குரலில் அன்பும் பெருமிதமும் இணைந்து பிரவாகித்தது.

(தொடரும்)



# அடுப்படியில் அடியெடுத்து வைத்தபோது...

## சொல்லித் தர மறந்தது!

கன்னி முயற்சியாக மோர்க்குழம்பு வைத்தேன். 'சமையல் கலை' புத்தகம்தான் எனக்குக் குரு. ஆனால் அந்தக் 'குரு' ஒரு விஷயத்தைச் சொல்லித் தர மறந்துவிட்டதால் நான் மிகவும் அவஸ்தைப்பட வேண்டியதாகிவிட்டது. அந்த விஷயம்: 'பாத்திரத்தை அடுப்பிலிருந்து இறக்கும் போது இடுக்கி அல்லது கைப் பிடித் துணியை உபயோகிக்க வேண்டும்' என்பதுதான்! அன்று கையில் போட்டுக் கொண்ட சூடால் மோர்க்குழம்பை எடுத்துச் சாப்பிட முடியாமலே போய் விட்டது!

— ஆர். வேங்கடேசன், பவானி.

## பொங்கி வழிந்த அரிசி மாவு!

எனது தாயாரின் உடம்பு சரியில்லாத சமயங்களில்நான்தான் அடுப்படியில் 'இன்—சார்ஜ்.' அப்படி முதல் முறையாகப் பொறுப்பு ஏற்றபோது டிபன் செய்வதற்காக அரிசி மாவை எடுத்து · இலுப்பச் சட்டியில் போட்டதுதான் தாமதம், 'புஸ், புஸ்' என்று அது பொங்கி வழிய ஆரம்பித்து விட்டது. அரிசி மாவு டப்பாவுக்குப் பக்கத்திலேயே இருந்த வாஷிங் சோடாவை எடுத்து வாணலியில் போட்டதால்தான் அப்படி நேர்ந்தது என்று தெரிந்ததும் என் முகத்திலும் அசடு வழிந்தது.

— எம்.ஜே.ராமகிருஷ்ணன்,
சக்ரதர்பூர் (பிஹார்).

## த்ரீ — இன் — ஒன்

திருமணம் ஆன புதிதில் 'நானும் சமையல் பண்ணுகிறேன்' என்று பேர் பண்ணி ஏதோ செய்து முடித்தேன். அன்று வந்த விருந்தினரிடம் என் கணவர், ''இன்று எங்கள் வீட்டில் ''த்ரீ — இன் — ஒன் சமையல்'' என்றார். புரியாமல் விழித்தவர்களிடம் விளக்கினார்: ''பாத்திரத்தின் அடி வரை கரண்டியை விட்டு எடுத்தால் காய்கறி கூட்டு. நடுவில் கிண்டி எடுத்தால் சாம்பார். மேலாக எடுத்தால் ரஸம்.'' வந்தவர்களுடன் சேர்ந்து நானும் சிரித்துவிட்டேன்!

— திருமதி ஆர். பாரிஜா, தூத்துக்குடி.

## நளபாகம்தான்!

சமையல் அறை அனுபவம் சிறிதும் இல்லாத எனக்கு இன்ஸ்டிடியூட் ஆஃப் கேடரிங் டெக்னலஜியில் இடம் கிடைத்தது. முதல் நாள் சமையற்கலை கல்லூரிக்குப் போன போது, ஆசிரியர் ஆங்கிலத்தில் விளக்கங்களைக் கூறி, சாமான்களை எடுத்துக் கொடுத்து என்னென்ன சமைக்க வேண்டும் என்றும் கூறினார். ஆங்கிலம் சரியாகப் புரியாத போதிலும் சமைத்து முடித்தேன். என் 'நளபாகத்'தை ருசி பார்த்த ஆசிரியர் என்னையும் அதைச் சாப்பிடச் சொன்னார். செய்த ஒன்றாவது வாயில் வைக்கும்படி இருக்க வேண்டுமே! சாதம் கஞ்சியாகவும், சாம்பார் ஒரே உப்பாகவும், கூட்டில் காய் வேகாமலும் இருந்தன.

— வி. செல்வபாரதி, மபரியகுப்பம்.

## இட்லி சுட்ட அழகு!

என் மாமி இட்லி சுடுவதற்குத் தயார் செய்து கொண்டிருக்கையில் யாரோ அவசரமாக வந்து கூப்பிட்டதால் எங்களையே இட்லி தயார் செய்து சாப்பிடும்படி சொல்லிவிட்டுப் போய் விட்டார். மாமாவும் நானும் அடுப்படியில் புகுந்து இட்லி சுட்டோம். அரை மணி நேரம் ஆகியும் இட்லி வெந்து, பொங்கி நிற்கவில்லை! 'சதபுத்' என்று ஓசை மட்டும்தான் வந்தது. அதற்குள் திரும்பி வந்துவிட்ட மாமி விழுந்து விழுந்து சிரித்தார்: ''தட்டுல துணியைப் போடாமே மாமனும் மருமகனும் நல்லா இட்லி சுட்டிய!'' என்று அவர் சொன்ன பிறகுதான் எங்கள் தவறை உணர்ந்தோம்.

— எஸ். பி. செல்வம்,
திண்டுக்கல்.


வாசகர் பங்கு

## திருஷ்டி கழித்தேன்!

சிறு வயதில் அம்மாவுக்கு நிறைய உதவி செய்ய ஆசைப்படுவேன். ஒரு நாள் அம்மா என்னை அரிசியைக்



அருள் வாக்கு

ஞானியையும், ஞானத்தைத் தேடுகிறவனையும் மட்டுமில்லாமல், லௌகிக கஷ்டம் தீருவதற்காகவே ப்ரார்த்தனை பண்ணுகிறவனையும் ஓரளவு ஸௌக்யமாயிருந்தும்கூட இன்னும் ஜாஸ்தி ஸௌக்யம் வேண்டும் என்று ப்ரார்த்திக்கிறவனையும்கூட ஏன் பகவான் தன் பக்தர்கள் என்று சொல்லிக் கொண்டார்? ஏன் அவர்களை 'ஸுக்ருத்' 'உதாரர்கள்' என்றெல்லாம் ச்லாகித்தார்? என்பது கேள்வி.

நம்மால் எதையும் ஸாதித்துக் கொள்ள முடியாது; ஈச்வர சக்திதான் எல்லாவற்றுக்கும் மேல் பெரிதானது என்று நம்பித்தானே ஓர் "ஆர்த்தன்" (அதாவது கஷ்டப்படுகிறவன்) பகவானை ப்ரார்த்திக்கிறான்? இது நல்ல மனோபாவம்தானே? இதனால்தான் இப்படிப்பட்ட மனோபாவம்படைத்தவர்களையும் பகவான் 'ஸுக்ருதின:' 'உதாரா:' என்று ச்லாகித்துச் சொல்லியிருக்கிறார் என்று வைத்துக் கொள்ளலாம்.

எதற்கும் 'நான்' 'நான்' என்று மாரைத் தட்டிக் கொண்டிருக்கிற மனுஷ்யன் ஏதோ ஓர் இடத்தில், தான் அவன் க்ருபை இல்லாமல் எதுவும் செய்ய முடியாது என்று நம்பி, அடங்கி, பணிந்து, வேண்டிக் கொள்கிறான் என்றால் அது அந்த அளவுக்கு உயர்ந்தது தான். லௌகிகமான தேவையின் பூர்த்திக்காகத்தான் இருக்கட்டும், அல்லது வேறு எந்தக் காரணத்துக்காக வேண்டுமானாலும் இருக்கட்டும், நம் எல்லோரையும்விட பகவான் பெரியவன் என்ற நம்பிக்கையோடு ப்ரார்த்தனை பண்ணுவது ஸரியானதுதான் என்றே சொல்ல வேண்டும். 'இந்த வாழ்க்கையிலேயே தர்மத்துக்கு விரோதமாக இல்லாத வரையில் ஜனங்களின் ந்யாயமான ஆசைகளாகக் கூட நானே இருக்கிறேன்' என்று பகவானே கீதையில் சொல்லியிருக்கிறான். (7—11) தர்மா விருத்தோ பூதேஷு காமோஸ்மி பரதர்ஷப. அதர்மமாக ஆசைப் படக்கூடாது. துராசை கூடாது. தர்மமான ஆசைகள் இருந்தால் அதை பகவானும் அந்த ஸ்டேஜில் ஒத்துக் கொள்வார்.

"ஸரி, அப்படியானால் போதுமான அளவுக்கு (ஸௌக்யம்) இருந்தும்கூட, அதற்கும் மேல் வேண்டும் என்று ப்ரார்த்தித்துக் கொள்கிற அர்த்தார்த்தியின் ஸமாசாரம் என்ன? அவனை எப்படி பக்தர்களோடு சேர்க்கலாம்" என்ற கேள்வி எழும்புகிறது. அதுபற்றி அடுத்த வாரம் பார்க்கலாம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

களைந்து வெண்கலப் பானையில் போடச் சொன்னார். அப்படிப் போட்ட பிறகும் பாத்திரத்தின் அடியில் சிறிது அரிசி ஒட்டிக் கொண்டிருந்தது. அதில் துளி தண்ணீர் ஊற்றி, சுற்றிப் போடச் சொன்னார். நானும் வெகு சிரத்தையாகப் பாத்திரத்தில் சிறிது நீரை விட்டு அதை அடுப்பைச் சுற்றித் தெளித்தேன்! இதை கவனித்த என் அண்ணா அடுப்புக்கே திருஷ்டி சுற்றிப் போட்ட என் 'புத்தி சாலித்தனத்தை' ப் போவோர் வருவோரிடமெல்லாம் சொல்லிச் சிரித்தார்.

— ராஜி குருசாமி, சென்னை—88.

## இறங்க மறுத்த டிகாக்ஷன்!

என் சமையலறைப் பிரவேசம் நிர்ப்பந்தமாகிய போது இன்றியமையாததான காப்பியைத் தயாரிப்பதில் இறங்கினேன். ஃபில்டரில் பொடியைப் போட்டுக் கொதிக்கும் நீரை விட்டு, ஒரு தட்டுத் தட்டினேன். டிகாக்ஷன் இறங்கும் ஓசையே கேட்கவில்லை. டமார், டமார் என்று ஓங்கி ஃபில்டரின் தலையில் அடித்தும் பயனில்லை. சொட்டுக் கூட டிகாக்ஷன் இறங்கவில்லை. சலித்துப் போய், காப்பியைக்கடையில்வாங்கிவரச்சொல்லிக் குடித்தேன். எதிர் வீட்டு அம்மாள் எதேச்சையாக எங்கள் சமையலறைக்குள் வந்து பார்த்துவிட்டு டிகாக்ஷன் இறங்காததின் மர்மத்தை விடுவித்தார் — காப்பி ஃபில்டரின் அடிப் பாத்திரத்தில் பொடியைப் போட்டு விட்டுத் தட்டோ தட்டென்று தட்டினால் எப்படி இறங்கும்?

— கே. ஆர். பாலசுப்ரமணியன், மன்னார்குடி.

---

**ப்ளோப்ளாஸ்ட் வழங்கும் வி. ஐ. பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:**

**எம். ஜே. ராமகிருஷ்ணன்,**
**D/2/6, டப்ளிங் காலனி,**
**சக்ரதர்பூர், (பீஹார்).**
**— 833 102.**



# சொர்க்கத்தின் கதவுகள்

## 18

பல நாட்களுக்குப் பின் விமலா மிகுந்த பிரயாசையுடன் ஸ்நானம் செய்திருந்தாள். நோயுடன் போராடி மீண்டு வந்த பின்பு அவளால் முன்னைப்போல் ஓடியாட முடியாத குறை வேறு. அத்துடன், வழக்கமாக விசேஷ நாட்கள், வெள்ளி, செவ்வாய் என்று நீராடி, பூஜை புனஸ்காரம் என்று கொண்டாட இயலவில்லையே என்ற மனத்தாங்கல் வேறு அவள் நெஞ்சை அழுத்திக் கொண்டிருந்தது.

''வெள்ளிக் கிழமையா இருக்கு. தலைக்கு ஸ்நானம் செய்யலாம்னு ஓர் ஆசை'' தயக்கத்துடன் கணவரிடம் அவள் வெளியிட்ட போது அவர் பயத்துடன், ''டாக்டர்கிட்ட கேட்காமல் எதுவும் கூடாது'' என்று மறுத்திருந்தார்.

கடந்த சில நாட்களாகச் சுவாமிநாதன் ஓயாமல் வீட்டினுள்ளும், வெளியேயுமாக அலைந்து கொண்டிருந்ததில், மனைவியின் சிறு வேண்டுகோளை மறந்தே போயிருந்தார்.

முதல் நாள் மாலைதான் டாக்டர் மோகனிடம் அவர் விமலாவின் உடல் நிலை பற்றிச் சாங்கோபாங்கமாகக் கூறிவிட்டிருந்தார். டாக்டரது அனுமதியின் பேரில் விமலா, ஸ்நானம் செய்ய முடிந்தது.

''ரொம்ப நாளாச்சு. இப்படி சுத்தமா குளிச்சு வரது இல்லையா? முன்னெல்லாம் ஒரு நல்ல நாள்கூட விட மாட்டேன். இப்ப என்னடான்னா.....?'' கூறியபடி தலையை இலேசாகக் கோதியபடி சாய்வு நாற்காலியில் சரிந்து கொண்டாள் விமலா. முகத்தில் சிறிது அயர்ச்சி தெரிந்தது. இருப்பினும், பரிசுத்தமான உணர்வு அவளது முகத்தில் புன்னகையாகப் பூத்திருந்தது.

மனைவியை வாஞ்சையுடன் பார்த்தவர், ''இதுதான் சாக்குன்னு நீ அடிக்கடி ஸ்நானம், பூஜைன்னு ஆரம்பிச்சுடாதே. டாக்டர் மோகன் ரொம்பக் கண்டிப்பாகச் சொல்லி இருக்கான். நன்றாக ஓய்வு எடுத்துக் கொண்டால்தான் உடம்பு குணமாகும்னு. சரி! சரி! முதல்லே குளிச்சு வந்த சிரமம் தீரட்டும். அப்புறமா சாப்பிடலாம்'' என்றபடி மெல்ல அருகில் வந்து நின்று கொண்டார் சுவாமிநாதன்.

கணவர் நின்று கொண்டிருக்கும்போது, தான் சாய்வு நாற்காலியில் சொகுசாகச் சாய்ந்து கிடப்பது அவளுக்கு வேதனையாக இருந்தது.

அந்தச் சாய்வு நாற்காலி ஒரு காலத்தில் அவர் தமக்காக ஆசையுடன் வாங்கிப் போட்டது. தப்பித்தவறி அதில் யாராவது உட்கார்ந்தாலும் அவருக்குக் கோபம் சீறிக் கொண்டு வந்துவிடும். ஒருமுறை, அலுவலகத்திலிருந்து திரும்பியவர் விமலா அதில் படுத்தபடி புஸ்தகம் ஒன்றில் லயித்திருப்பதைப் பார்த்துவிட்டார்.

''என்ன ஒய்யாரம் வேண்டியிருக்கு? நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு கதைப் புஸ்தகம் படித்தால் போறாதோ? அப்படி என்ன பரீட்சை தட்டுக் கெட்டுப் போகிறது?'' உறுமினார்.

விமலா மிகுந்த சிரமத்துடன் எழுந்தவள், ''தப்புதான். மன்னிச்சுடுங்கோ. முந்தா நாள் பாத்ரூம்லே கீழே வழுக்கி விழுந்ததிலே இடுப்பில் அடிபட்டு விட்டது. சரியாக உட்கார முடியாமல் கஷ்டமாக இருந்தது. அதனால் கொஞ்சம் சாய்ந்து கொண்டு....'' முடிக்குமுன் அவளுக்குத் துயரம் நெஞ்சைக் கவ்வியது.

''பாத்ரூமை ஒழுங்காகத் தேய்ச்சுக் கழுவா விட்டால் அப்படித்தான்'' கடுமையுடன் பதில் அளித்தபோது அவர் துடிப்புடன் இருந்த இளைஞர். ஆனால் அதே சுவாமிநாதன் தன் தாயார் உட்கார முடியாமல், ''சுவாமி! முதுகு ரொம்ப வலிக்கறதப்பா'' என்றபோது எப்படித் தவித்துப் போனார்!

''இந்த ஈஸி சேரில் சாஞ்சுக்கோம்மா. முதுகு வலிக்காது'' என்று அவரே முன்

> "நீ யாரைச் சொல்றேன்னு புரியறது. உன்னையும் அருணாவையும் சொல்றே. நான் ஜடம். என் தம்பி பெண்டாட்டிதான். அதுதானே நீ சொல்றது..."

வந்து தாய்க்கு உதவியபோது விமலாவின் மனம் என்ன பாடுபட்டிருக்க வேண்டும்? இதுபோல், பல சிறு விஷயங்களில் அவர் அவளிடம் மிகக் கடுமையுடன் நடந்திருக்கிறார். அதனால்தானே இப்போது ஆண்டவன் அவருக்கு ஒரு மாபெரும் தண்டனையை அளித்து விட்டான்?

''நீங்க நிற்கிறேளே'' பரிவுடன் அவள் வினவியபோது, அவர் உருகிப் போனார்.

''இருக்கட்டும். நான் சாப்பிடறத்துக்கு எல்லாம் எடுத்து வைக்கிறேன். அப்புறமா ரெண்டு பேரும் சேர்ந்தே சாப்பிடலாம்'' என்றபடி சமையலறைப் பக்கம் போனார் சுவாமிநாதன்.

தட்டில் சாதத்தைப் பரிமாறிவிட்டு மனைவியை ஆதரவுடன் கையைப் பற்றி அதனருகில் சுவாமிநாதன் அமர்த்தினார்.

''ஒரு கூட்டும் ரசமும்தான் வெச்சிருக்கேன். நீ சாப்பிட்டுப் பார். காரமே இருக்காது'' என்று வேடிக்கையாகக் கூறியபடி தட்டை அவளருகில் நகர்த்தினார்.

''என்னால் உங்கள் சாப்பாடும் சப்பு, சப்புன்னு சாப்பிடும்படியா ஆகிவிட்டது''



லக்ஷ்மி

விமலா சோற்றைப் பிசைந்தபடி வருத்தத்துடன் கூறினள்.

''வயசாக வயசாக, காரம், உப்பு எல்லாத்தையும் குறைக்கணும்னு டாக்டர் சொல்லி இருக்கிறாரே.''

கணவனது கேலி பேச்சில் மகிழ்ந்தவள் சட்டெனக் கேட்டாள். ''அந்தப் பையன் கேசவனுக்கு உடம்பு தேவலையாமா?''

கேசவனைப் பற்றி அவர் அவளிடம் அரைகுறையாகக் கூறி இருந்தார். சாதாரணமாக இருந்தால் அவர் தம் மனத்துக்குள்ளேயே விஷயங்களைப் புதைத்துக் கொண்டுவிடும் இயல்புடையவர். ஐஸ்வர்யா காதல் விவகாரத்தை, கல்யாணம் நிச்சயமாகும்வரை அவர் மூச்சு விடவில்லை.

''ஐஸ்வர்யா உங்ககிட்டே என்ன பேசணும்னு ஓடி வராள்?'' என்று விமலாவும் கேட்டதில்லை.

ஆனல் இப்போது சுவாமிநாதன் பலவிதமான கவலைகளின் பாதிப்பினல் அரண்டு போயிருந்தார். அத்துடன் அவரும் விமலாவும் மட்டுமே மிக நெருக்கமாக வந்துவிட்ட வாழ்க்கையில், மனைவியின் துணை அவருக்கு உற்ற தோழமையாகத் தோன்றியது. மனைவியின் உடல்நிலை கருதி, அவர் போய் வந்த ட்யூஷன்களைக் கூட ஒத்திப் போட்டுவிட்டிருந்ததால், நேரம் அவரைச் சுமையாக அழுத்திக் கொண்டிருந்தது.

''கேசவன் உடம்பு தேவலை. இப்பத்தான் பேச ஆரம்பிச்சிருக்கான். ஆனல் இன்னும் ஒரு வாரம் ஆகும்னு டாக்டர் மோகன் சொல்கிறன்'' தமது சாப்பாட்டுத் தட்டைப் பார்த்தபடி பெருமூச்சுவிட்டார்.

''பாவம் உங்களுக்குத்தான் ரொம்ப அலைச்சல்.''

''ஊருக்கு உபகாரம்னு கிளம்பிட்டா...''

''இத்தனை நாட்களாக குடும்பத்துக்குன்னு செஞ்சேன். அது உங்க கடமை. ஆன, யாரோ ஒருத்தருக்கு உதவி செஞ்சா அது சேவை தானே?''

ஒன்றுமே அறியாத பேதை. அறிவிலி சதா துளசி மாடத்தை வலம் வந்து, பூஜை நடையில் விளக்கேற்றி, மௌனமாக, மாமியார், நாத்தனருக்கு அடி பணியும் ஒரு செக்குமாடு எனத் தப்புக் கணக்குப் போட்டு விட்டிருந்திருக்கிறர்!

''பாவம்! யார் பெத்த பையனே! நம்மாலான ஓர் உபகாரம் செஞ்சா.....

மனைவியை வியப்புடன் பார்த்தபடி, ''நம்ம குடும்பத்திலயும் ஒரு சில சங்கடங்கள் ஏற்பட்டிருக்கே'' என்றர்.

''நிச்சயம் அதுவும் நம்முடைய பிரச்னைகள்தான். இந்த மாதிரி மனசுல கவலைப்பட்டுக் கொண்டு இருக்கிறதால்தான் நீங்க ட்யூஷனுக்குக் கூடப் போகறதில்லே போல இருக்கு'' விமலா மெதுவாகக் கேட்டாள்.

''தெரியாத மாதிரி கேக்கறியா? நான் ட்யூஷனை விடலே. என்ன, நம்ம பற்றாக்குறை பட்ஜெட்டுக்கு அதுதான் கைகொடுக்கிற தெய்வம். ஆனல், இப்ப பல பிரச்னைகள்ளே மாட்டிண்டிருக்கேன். அதோடு உன் உடம்பு வேறு. அதனல் கொஞ்சம் முன்னே பின்னே, 'அட்ஜஸ்ட்' செஞ்சேன்.''

''வாழ்க்கையில்கூட அப்படித்தான் ஒருத்தருக்கொருத்தர் 'அட்ஜஸ்ட்' செஞ்சுக்கறதில் இருக்கு'' விமலாவின் சோர்ந்த முகத்தில் இலேசான குறும்பு தெரிந்தது.

''ஜோக் அடிக்கிறியா?''

''சிவ சிவா! நான் உண்மையைச் சொல்றேன். பரஸ்பரம் விட்டுக் கொடுத்துப் போனத் தானே வாழ்க்கை சரியா அமையும். புருஷனுக்கு அடங்கின மனைவி, மனைவி சொல் கேட்கும் புருஷன்னு வாழ்க்கை நடத்திறதிலே சுவாரஸ்யம் கிடையாது.''

''நீ யாரைச் சொல்றேன்னு புரியறது. உன்னையும் அருணனையும் சொல்றே. நான் முரடன். என் தம்பி பெண்டாட்டிதாசன். அதுதானே நீ சொல்றது'' அவளை மடக்கி



ராஜாஜி வாழ்க்கை வரலாறு அடுத்த இதழில்..

னார் அவர்.

"அதில் எந்தவிதமான தவறும் இல்லே. பரஸ்பரம் விட்டுக் கொடுக்கிற மனப்பான்மை புருஷன் மனைவி ரெண்டு பேருக்குமே இல்லேன்னா, யாராவது ஒருத்தர் அடங்கித்தான் போகணும். இல்லேன்னா குடும்பம் குட்டிச் சுவராயிடும். அதுக்குத்தான், நம்மவர்களிலே பெண்களுக்குப் பொறுமை வேணும்னு சொல்லியிருக்கிறார்கள். இல்லாட்டா, குடும்பம் வாழையடி வாழையா வளர முடியுமா?"

சுவாமிநாதன் மனைவியின் பேச்சின் ...ம் பல விஷயங்களைப் புரிந்து கொண் ...ர். 'முரடரான உங்களுக்கு வாழ்க்கைப் ...ட்டேன். எந்த விஷயத்திலும் பிடிவாதம் ...தொட்டதற்கெல்லாம் முன் கோபம். குடும்பத்தின் சுமையினால் ஏற்பட்ட பாதிப்புக்களை, மனைவியிடம் சீறிக் கோபம் தணித்துக் கொள்ளும் ஆத்திரக்காரர். என் சுகங்களைத் தியாகம் செய்து, உங்கள் துக்கங்களைச் சுமந்து வாய் திறவாமல் வாழ்க்கை நடத்தியதால், இப்போதும் நம் குடும்பம் குலையாமல் இருக்கிறது' மனைவியின் முகத்தைப் பார்த்தவர் மௌனமானார்.

"ஐஸ்வர்யா எதுக்காக வந்திருக்கான்னு எனக்குத் தெரிஞ்சுடுத்து. என் ஊகம் சரிதானே?"

தூக்கிவாரிப் போடச் சுவாமிநாதன் அவளை ஏறிட்டுப் பார்த்தார். பார்த்தால் பூனை மாதிரி இருந்து கொண்டு.....?

"அவளுக்குப் புத்திமதி சொல்லித் திருப்பி அனுப்புங்கோ. அந்தப் பையன் ரொம்ப நல்லவன். கீழ் மட்டத்தில் கஷ்டப்பட்டுப் படிப்படியா முன்னேறிக் கொண்டு வருகிறவன். இவன் ரொம்பச் செல்லம் கொடுத்து வளர்த்துவிட்டதால், பிடிவாதம் பிடிக்கிற ஜாதி. அருணா சுபாவம் அப்படியே....." என்று பெருமூச்சுடன் நிறுத்தினாள் விமலா.

"இவ்வளவு தூரம் ஐஸ்வர்யாவைப் பற்றித் தெரிந்து கொண்டாயே, அஸ்வத் சமாசாரம் தெரியுமோ உனக்கு?" வேடிக்கையாகக் கேட்டபடி, அவளுக்குக் கை கழுவத் தண்ணீர் எடுத்துக் கொடுத்து உதவினார்.

கையைக்கழுவி, வாயைமெல்லத்துடைத்தபடி அவரைப் பார்த்துச் சிரித்தாள் விமலா. "ஐஸ்வர்யா மாதிரி இவனுக்கும் சொந்தப் பிரச்னையா?"

"நீ பெரிய ஆள்" மனைவியை உரிமையுடன் கேலி செய்தபடி, "நீ உட்காரு. உன்னிடம் நிறையப் பேசணும்" என்று கூறிவிட்டு, சமையலறையைச்சுத்தம்செய்யமுற்பட்டார்.

சிறிது நேரத்தில் மனைவி அமர்ந்திருந்த கட்டிலின் ஓரத்தில் சுவாமிநாதன் வந்து உட்கார்ந்தார். அஸ்வத் காதல் விவகாரம், ஐஸ்வர்யாவின் ஊடல், என்பதை விவரித்துக் கூறிவிட்டு "விமலா! இப்ப சொல். இதில் நாம் என்ன செய்ய முடியும்?" என்று கேட்டார் கவலையுடன்.

விமலா புன்னகை மாறாத மெல்லிய குரலில் கூறினாள்: "உங்ககூட நான் குடித்தனம் பண்ணலே; இப்ப நீங்க எங்கிட்டே எத்தனை பிரியமா இருக்கேள். அதுமாதிரி பொறுமையாக இருந்து வாழ்க்கையைப் பகிர்ந்து கொண்டால்தான், கணவன் மனைவிக்குள்ளே பாசம் பிடிப்பு எல்லாம் இருக்கும். அவளைக் கூப்பிட்டுப் புத்திமதி சொல்லுங்கோ. அவசரப்பட்டு எந்த முடிவும் எடுக்கக் கூடாது."

"அவதான் அவசரக்காரியாச்சே விமலா?"

"கல்யாணம் என்கிறது ஆயிரங் காலத்துப் பயிர். அதோட ஒரு குழந்தை வேறே இருக்கு. நமக்காவது அந்த பந்தம் இருக்கலே. ஆனா, ஐஸ்வர்யா ஒரு குழந்தையோட தாய். அந்தப் பொறுப்பை அவள் மறக்கவே கூடாது."

"என்னைப் போல் முரட்டாத்மாவோட பொறுமையா வாழ்க்கை நடத்தின நீ அந்தக் காலத்து மனுஷி. இந்தக் காலத்து இளம் பெண்கள் ரொம்ப சுதந்திரப் போக்கு உள்ளவர்கள். அதனால்....."

"சுதந்திரம்னா என்னன்னு முதல்லே அவளைப் புரிஞ்சுக்கொள்ளச் சொல்லுங்கோ. நடத்தை கெட்டவன், கெட்ட சகவாசம், பழக்க வழக்கம் உள்ளவன், மனைவியை இம்சிக்க அடித்துச் சித்ரவதை செய்யறவன், இப்படிப்பட்ட புருஷன்னா நிச்சயம் அவள் அடிமையாக இருக்கக் கூடாது. ஆனா இவள் நினைச்சபடியெல்லாம் அவன் சலாம் போட்டுக் கொண்டு இருக்கச் சொல்றது.... எனக்குப் பிடிக்கலே. அதை நான் புத்திமதியாச் சொன்னா ஒருவேளை அவளுக்குப் பிடிக்காமல் போகலாம்" நீண்ட நேரம் பேசியதால் அவளுக்குச் சற்று மூச்சு வாங்கியது.

"ஆமாம் அஸ்வத் விஷயம் சொல்லலியே நீ?"

"தாலி கட்டப் போறவன் அவன். அவன் சந்தோஷம்தானே நம்ம சந்தோஷம். இல்லியா?" விமலா மெலிந்த குரலில் கேட்டாள்.

"அந்த அசட்டுப் பிள்ளை என்ன பண்ணி இருக்கு தெரியுமோ, எனக்குத் தெரியாமல் என் சட்டைப் பையில் பணத்தைத் திணித்து விட்டுப் போயிருக்கான்" அவர் சிரித்தார் மகிழ்ச்சி பொங்க.

"எவ்வளவு?"

"இரண்டாயிரம். நான் திருப்பிவிட்டால் அவன் மனசு கஷ்டப்படுவான்னு அப்படியே வெச்சிருக்கேன்.."

"சந்தோஷம். முதல்ல, அந்தப் பணத்தில் அந்தப் பெண் மஞ்சுளாவுக்கு ஏதானும் நகை வாங்கிப் போடச் சொல்லுங்கோ. பொன்னை மதிக்கிற அளவு அருணா, பெண்ணை மதிக்கமாட்டா" ஆயாசத்துடன் விமலா படுக்கையில் சாய்ந்து கொண்டாள்.

அத்தனை வருட வாழ்க்கையில் முதன் முறையாக, மனைவி சொல்லே மந்திரமாக செயல்படத் தீர்மானித்தார் சுவாமிநாதன்.

(தொடரும்)

# எம்.ஜி.ஆரைப் புகழ விரும்பாவிட்டால்...

* ப.உ.ச. அளித்த பேட்டியின் ஆரம்பமே சூடுபிடித்துவிட்டது. முதல் கேள்விக்கே ப.உ.ச. மழுப்ப ஆரம்பித்துவிட்டார்! தங்களுக்குச் சாதகமாகப் பஞ்சாயத்து, ஊராட்சித் தேர்தல் முடிவுகள் அமைவதற்காகவே வாக்குரிமை வயதை 21ல் இருந்து பதினெட்டாகக் குறைத்திருக்கிறார்கள். இதைப்போய், அதிகப்படியான மக்களுக்கு ஜனநாயக உரிமைகள் தரப்பட வேண்டும் என்ற பரந்த நோக்கத்தில் செய்யப்பட்டுள்ளது என்று ப.உ.ச. மழுப்பி இருக்கத் தேவையில்லை!

எஸ்.வி. ராஜசேகர்,
சென்னை—5.

* 'சினிமா புதிர் அல்ல' என்று ஜம்பமாகக் கூறிவிட்டு சினிமா ஆட்களைப் போட்டுப் புதிரை ஆரம்பித்த உமது ஐடியாவை என்னங்கிறது? முதல் பக்கத்திலேயே ஏதோதானுபுதிரைப்போட்டால் நாங்க புரட்டிவிடுவோம்னு நினைச்சு, இப்படி சினிமாவைத் துணைக்கழைப்பது உங்களுக்கே நல்லாயிருக்கா?

மது ஜெயபால்,
அத்திமலைப்பட்டு.

* யாருடைய வாய்? யாருடைய கண்? என்று சினிமா ஸ்டைலில் ஒரே மாதிரியான புதிர்களைப் போட்டுக் கொண்டிருக்கும் பத்திரிகையாளர்களுக்கு, இவ்வார கல்கியின் முதல் பக்கப் புதிர் ஒரு சவுக்கடி.... நிஜமாகவே சிந்திக்க வைத்த க்விஸ் அது.

பெங்களூர்—16, டால்ரிக்ஸ்.

* ராமகிருஷ்ண ஹெக்டே பற்றிய தங்கள் தலையங்கம் நயத்திலும் நயமானது; மாநிலத்திற்கொரு ஹெக்டே இருந்தாலே போதும், நானிலத்தில் நமது பாரத நாடு மகோன்னதமாய்த் திகழும் என்பதில் ஐயமில்லை.

மதுரை—1, வி. சந்திரசேகரன்.

* தலையங்கம் கண்டேன். சாராயத்தைப் புட்டிகளில் அடைக்கும் பணியில் ஈடுபடும் நிறுவனங்களைத் தேர்ந்தெடுத்த பின்னரே விதி முறைகளை மாற்றியது கர்நாடக அரசு. நீங்கள் சொல்வது போல் மக்கள் நலனுக்கென விதிமுறைகள் மாற்றப்பட்டிருந்தால் அதை முன்னரே அல்லவா செய்திருக்க வேண்டும். இந்த விஷயத்தில் 'ஹெக்டே அரசு' நடந்து கொண்ட முறையை நியாயப்படுத்த 'மக்கள் நலன்' என்ற வார்த்தையை நீங்கள் உபயோகித்திருப்பது வெறும் நொண்டிச் சாக்காகும்.

அரியலூர், ஜி. குருமூர்த்தி.

* ஹெக்டேயை ராஜினாமா செய்யாதீர்கள் என்று தமிழக முதல்வர் டாக்டர் எம்.ஜி.ஆர். கூறிய அறிவுரை தேவையற்றது என்றால் ஜனதா கட்சித் தலைவர் சந்திரசேகர் ராஜினாமா செய்ய வேண்டாம் என்று சொன்னாரே அது தேவையற்றதா? ஆந்திர முதல்வர் என்.டி.ஆர். கூறியது வேண்டாத ஒன்றா? கர்நாடக கவர்னர், ஹெக்டே ராஜினாமாவை வாங்க ஆரம்பத்தில் மறுத்தாரே அது தார்மீக சிந்தனைக்கு முரணானதா? துக்ளக் சோ கர்நாடக மக்கள் துரதிர்ஷ்டசாலிகள் என்று எழுதினாரே அது தவறான கருத்தா? கர்நாடக ஜனதா எம்.எல்.ஏ.க்கள் காலில் விழுந்து கதறினார்களே அது தகாத ஒன்றா? கல்கி எம்.ஜி.ஆரை புகழ விருப்பமில்லையென்றால் அவதூறு கூறாமல் இருப்பது வரவேற்கக் கூடியது.

இராஜேந்திரன்,
லால்குடி—1.

* 'எனக்கா பரதம் ஆடத்தெரியாது?' என்று தன்னைப் பற்றி குறை கூறுபவர்களை பத்மா சுப்பிரமணியம் கேட்பது போன்ற பாவத்துடன் அமைந்த அட்டைப் படம் டாப். (பேட்டியும் கூடத்தான்.)

எம். தியாகராஜன்,
சென்னை—28.

* கல்கியின் பின்னட்டையில் வெளியான 'இறைவன் ஏற்றிய தீபங்கள்' எழுதியவர் யாரென்று குறிப்பிடவில்லையே சார்! மிக அருமையான கவிதை. 'தீபங்களை' மிக அழகாகப் படமெடுத்துள்ள இனிப் பானர்ஜிக்குப் பாராட்டுகள்.

தர்மபுரி—2, வித்யா.

* 'ஒரு பிரச்னை, ஒருபடம், ஒரு பாடல்' பகுதியில் இடம்பெற்ற கவிதைகள் அனைத்தும் அருமை. குறிப்பாக, தே. அமரசிகாமணி எழுதிய கவிதை எளிய தமிழில் இனிமையாய் இருந்தது.

சீர்காழி, இரா. சுதாகர்.

* விநோதானந்த் எழுதிய மனைவியைப் பற்றிய மதிப்பீடுகள்' கதையின் நகைச்சுவை முடிவு, கல்கியின் சீரியஸ்ஸான கட்டுரைகளுக்கிடையே நிச்சயம் வித்தியாசமானது.

திருச்சி—18, ராஜிராதா.

* 16.2.86 இதழில், 'ஹிந்து மதத் தலைவர்கள், மடாதிபதிகள் யாரும் போப்பைப் போய்ச் சந்திக்க வேண்டா'மென்று சுவாமி சின்மயானந்தா கோரிக்கை விடுத்திருக்கிறாரே, படித்தீரா?' என்ற கேள்விக்குத் தராசு பதில் எழுதி இருப்பதைப் படித்தேன். Tapovan Prasad ஜனவரி இதழில் சின்மயாவின் ஒரு கருத்து பிரசுரமாகியுள்ளது. அதில் போப்பை ஹிந்துக்கள் தம்முடைய அதிதியாக ஏற்று 'அதிதி தேவோ பவ' என்றபடி போற்ற வேண்டுமென்று சொல்லி இருக்கிறார்.

எம்.என். வேங்கடராமன்,
தண்டூர்.

* 'போப்புக்கு ஒரு பரிசு தண்டு'' என்ற தலைப்பில் வெளியான தகவலில் 'செயிண்ட் பீட்டர்' என்று குறிப்பிட்டிருப்பது தவறு. அவர் பீட்டர் அல்ல. அவர் தான் இந்தியாவில் கிறிஸ்து மறையைப் போதித்த 'புனித பிரான்சிஸ் சேவியர்'.

பி. அற்புதசாமி,
பொன்மலைப்பட்டி.

**வட்டமேஜை**



“பத்மா சுப்பிரமணியத்துக்கு”

## ஏமாந்துபோன மலைவாசி மக்கள்

# "சோறு போட்டாங்க; ஓட்டுப் போட்டோம்!"

* இயற்கை கொஞ்சும் அகமலை கிராமம்.

"உங்களுக்கு எத்தனை குழந்தைகள்?"— மேற்குத் தொடர் மலையில், கடல் மட்டத்திலிருந்து சுமார் நான்காயிரத்து ஐநூறு அடி உயரத்திற்கு மேலுள்ள சொக்கனளை என்ற கிராமத்தில் வசிக்கும் பளியர்கள் என்ற மலை வாசிகளில் ஒருவரான பழனி என்பவரிடம் கேட்டோம்.

"பன்னண்டோ என்னமோ, சரியாத் தெரியலீங்க சாமி! பொறுங்க, தம்பியைக் கேட்டுச் சொல்றேன். 'கருப்பையா எனக்கு எத்தனை கொழந்தைங்க? இவங்க கேட்கறுங்க. வந்து சொல்லு!"

"அண்ணனுக்கு ஒன்பது பசங்க. மூணு பொட்டைங்க. மொத்தம் பன்னண்டுங்க சாமி!"

தனக்கு மொத்தம் எத்தனை குழந்தைகள் என்பது கூடவா ஒருவருக்குத் தெரியாமல் போகும்! ஆச்சரியத்தோடு மறுபடியும் பழனி



* பழனி: "நான் எதுக்கு சாமி பொய் சொல்லப் போறேன்..."

மிடம், "உங்களுக்கு என்ன வயசு? அதை யாவது சொல்லுங்க!" என்று கேட்டோம்.

"என்னங்க சாமி நீங்க! படிச்ச உங்களுக்கே தெரியலீன்னு, எனக்கு எப்படிங்க தெரியும்?" என்றார் அப்பாவித்தனமாக.

"நிஜமாகவே உங்களுடைய வயசு உங்களுக்குத் தெரியாதா?" மீண்டும் கேட்டோம்.

"நான் எதுக்குச் சாமி பொய் சொல்லப் போறேன்! தெரியாதுங்க சாமி!" என்றார் பழனி.

சுதந்திரம் பெற்று முப்பத்தெட்டாண்டுகள் முடிந்த பிறகும் இப்படியொருவர் — தன் குழந்தைகளின் எண்ணிக்கை கூடத் தெரியாத ஒருவர் — தன்னுடைய வயதைக் கூடச் சொல்லத்தெரியாத ஒருவர் இன்னமும் இருக்கிறார் என்பதைக் கண்கூடாகக் கண்ட போது உண்மையிலேயே அதிர்ச்சியடைந்து விட்டோம்.

இது மட்டும்தானா? சொக்கனளை என்ற அந்த மலைவாசிகள் கிராமத்தில் வசிக்கும் சுமார் ஆயிரம் மலைவாசிகளில் முக்கால் வாசிப்பேருக்கு ஒன்று, இரண்டு, மூன்று... என்று பத்துவரை கூட எண்ணத் தெரியவில்லை. எண்ணிக் காட்டச் சொன்னபோது பலர் என்ன சொல்வதென்றே தெரியாமல் விழித்தார்கள். அவர்களில் மூன்றுவதுவரை படித்திருக்கும் பால்ராஜ் என்ற ஒரேயொருவர்தான் அந்தக் கிராமத்தில் உள்ள மிகப் பெரிய படிப்பாளி என்றால் மற்றவர்களைப் பற்றிச் சொல்லவே தேவையில்லை.

இப்படிப்பட்டதொரு தற்குறி நிலைக்கு என்ன காரணம்? 'கானப் பறவை கலகல வெனும் ஓசையிலும், காற்று மரங்களிடைக் காட்டும் இசைகளிலும், ஆற்று நீரோசை அருவியொலியினிலும்....' எண்ணையும் எழுத்தையும் எப்படிக் கற்றுக் கொள்ள முடியும்? பள்ளிக்கூடம் வேண்டாமா? அடிப்படைக் கல்விகூட இல்லாவிட்டால் அங்கு வீசும் சில்லென்ற காற்றையும், சிரித்து வரும் அருவிகளையும் கூட ரசித்து அனுபவிக்க முடியாதே!



* நோயாளிகளை இப்படித்தான் கொண்டு வருகிறார்கள்.

* செல்வி: "நீங்களே பாருங்க சாமி!"



மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த அந்த மலைப் பகுதியில் அகமலை, ஊரடி, ஊத்துக் காடு என்ற மூன்றே மூன்று கிராமங்களில் மட்டும்தான் ஐந்தாம் வகுப்பு வரையிலுள்ள ஆரம்பப் பள்ளிகள் இருக்கின்றன. மற்றபடி, அண்ணாநகர், சுப்பிரமணியபுரம், சொக்கனளை (இதில் மட்டும்தான் முழுக்க முழுக்க மலைவாசிகள் மட்டுமே வசிக்கின்றனர்.) பட்டூர், கானுமஞ்சி, அலங்காரம், மருதையனூர், படப்பம்பாறை, சின்ன மூங்கில், பெரிய மூங்கில், கரும்பாறை போன்ற பதினான்கு மலைக் கிராமங்களில் பள்ளிக் கூடம் என்ற பேச்சே கிடையாது.

அதுதான் மூன்று கிராமங்களில் பள்ளிகள் இருக்கின்றனவே, பக்கத்துக் கிராமங்களிலுள்ள குழந்தைகளெல்லாம் அங்கு சென்று படித்து வர என்ன தடை? என்று யாரும் சுலபமாகக் கேட்டுவிட முடியாது. காரணம், அங்குள்ள கிராமங்கள் ஒவ்வொன்றுக்குமிடையில் குறைந்த பட்சம் மூன்று கி. மீ. தூரமாவது இருக்கும். அந்த தூரத்தை இணைக்கும் பாதை எப்படிப்பட்டதென்று தெரியுமா? அத்தனையும் செங்குத்

தான மலைப்பாதை. அதுவும் முட்புதர்களும், கொஞ்சம் நிதானம் தவறினாலும் ஆளையே உருட்டித் தள்ளக் கூடிய குண்டு குண்டுக் கற்களும் நிறைந்த ஒத்தையடிப் பாதை. அதில் ஒரு கி.மீ. தூரம் நடப்பதற்குள்ளாகவே முழங்கால் மூட்டுக்கள் இற்றுப் போய்விடும். இந்த நிலையில் அவர்கள் எங்கே போய்ப் படிப்பார்கள்? மூன்றாம் வகுப்பு வரை படித்திருக்கும் பால்ராஜ் என்பவர்கூடச் சிறு வயதில் அகமலை கிராமத்தில் வசிக்க நேரிட்டதால்தான் ஒரு விபத்துபோல் படித்திருக்கிறார்.

இருக்கிற மூன்று ஆரம்பப் பள்ளிகளாவது ஒழுங்காக நடக்கின்றனவா என்றால் அது அதை விடவும் வயிற்றெரிச்சல் படவைக்கும் விஷயம். உதாரணத்திற்கு நாங்கள் அகமலை கிராமத்திற்குச் சென்று பார்த்த போது அந்தப் பள்ளியில் வேலை பார்க்கும் இரண்டு ஆசிரியர்களும் அன்றைக்கு வந்திருந்தார்கள். "இந்த மலைப் பகுதியிலும் இந்த இரண்டு ஆசிரியர்களும் வந்திருந்து பணி புரிவது பாராட்டுக்குரிய விஷயமல்லவா?" என்று அகமலைவாசிகளிடம் கேட்டபோது, அவர்கள் எங்களை வித்தியாசமாகப் பார்க்க ஆரம்பித்துவிட்டார்கள்.

"நீங்கள் இன்றைக்கு இங்கே வரப் போவது தெரிந்ததால்தான் இரண்டு பேரும் வந்திருக்கிறார்கள். மற்றபடி எப்போதும் யாராவது ஒருவர்தான் வருவார். மற்றவர் வராவிட்டாலும் வந்ததாகவே வருகைப் பதிவேட்டில் குறித்துக் கொண்டுவிடுவார். இது மலைப் பகுதியாதலால் யார் வந்தாலும் குறைந்தபட்சம் பத்து கி. மீ. தூரம் மலைப் பாதையில் நடந்துதான் வரவேண்டும். நடந்துதான் செல்ல வேண்டும் என்பதால் மேலதிகாரிகளும் சரி, அரசியல்வாதிகளும் சரி, மற்ற அதிகாரிகளும் சரி யாரும் இது வரை இங்கு வந்ததே இல்லை. அதனால் இந்த ஆசிரியர்களைக் கேள்வி கேட்க இங்கு யாரும் இல்லை. போனால் போகிறதென்று அவர்களாகப் பார்த்து வந்தால்தான் உண்டு. வேண்டுமானால் இங்கு படிக்கும் குழந்தைகளைக் கூப்பிட்டு, 'ஒன்று, இரண்டு....' சொல்லச் சொல்லுங்கள்; இந்தப் பள்ளியின் கல்வித் தரம் எப்படியிருக்கிறதென்று பார்க்கலாம்...." என்று ஆதங்கத்தோடு சொன்னார்கள் அகமலைவாசிகள்.

சில குழந்தைகளைக் கூப்பிட்டுக் கேட்டபோது அவர்கள் சொன்னது நூற்றுக்கு நூறு உண்மை என்பதை உணர்ந்தோம். ஆசிரியர்களைக் கேட்டபோது அவர்கள், "மலைவாசிக் குழந்தைகளுக்கு இதற்கு மேல் எப்படிப் படிப்பு வரும்?" என்று கொஞ்சம்கூடப் பொறுப்பில்லாமல் பதில் சொன்னபோது நாங்கள் மிகவும் வேதனைப்பட்டுப் போனோம். ..

"மலைப் பாதையில் குறைந்தபட்சம் பத்து கி.மீ. தூரமாவது இறங்கிச் சென்றால்தான் மலையடிவாரத்தை அடைய முடியும். இப்படிப்பட்டதொரு நிலையில் மருத்துவ வசதிகள் எப்படி?" அங்குள்ளவர்களிடம் கேட்டோம்.


எந்தச் சுமையானாலும் இப்படித்தான்... அல்லது ...இப்படித்தான்.

"வாருங்கள்!" என்று மௌனமாக எங்களை ஓரிடத்திற்கு அழைத்துச் சென்று காட்டினார்கள். அங்கே, 'துணை சுகாதார நிலையம்' என்ற போர்டுடன் ஓர் அருமையான கட்டடம் பாழடைந்து கொண்டிருந்தது. காம்பவுண்டுக்குள் முட்புதர்கள் மண்டிக் கிடந்தன. பூட்டப்பட்டிருந்த கதவுகள் உடைந்து போயிருந்தன. அது குழந்தைவேலு அமைச்சராக இருந்தபோது திறக்கப்பட்டது. அவர் அந்த மலைப் பகுதிக் கிராமத்திற்குச் சென்று திறக்கவில்லையாம். அந்தக் கல் பலகையைமட்டும்தாம் இருந்த இடத்திலேயே திறந்து வைத்து, அதையே தாம் நேரடியாக மலைமேல் ஏறி அந்தக் கிராமத்திற்குச் சென்று திறந்து வைத்ததுபோல் பதிக்கச் சொல்லிவிட்டாராம்!

"இந்தத் துணை சுகாதார நிலையம் ஏன் இப்படிக் கிடக்கிறது?" என்றோம்.

"இதற்கு ஒரேயொரு நர்ஸ் அம்மாவைத்தான் போட்டிருக்கிறார்கள். அவரும் போடிநாயக்கனூரில் இருக்கிறார். இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒருமுறைதான் வந்து எட்டிப் பார்ப்பார். அப்போது எங்களில் யாராவது நோய்வாய்ப்பட்டுச் சென்றால்—அந்த நோய் ஊசி மூலம் குணமாகக் கூடியதாக இருந்தாலும், அவர் ஊசி போட மாட்டார். ஆனால் ஊசி போட்டதாகச் சொல்லச்

சொல்லிவிட்டுச் சென்றுவிடுவார்!" என்றார்கள்!

சுகாதார நிலையத்துக்குப் பக்கத்திலுள்ள குடிநீர்த் தேக்கத் தொட்டிகளைச் சென்று பார்த்தோம். மலையிலிருந்து இயற்கையாகக் குதித்தோடி வருகின்ற ஒரு சிறு ஊற்றை முறைப்படுத்திக் குழாய் மூலம் சப்ளை செய்ய வேண்டியதுதான் அந்தத் தொட்டிகளின் வேலை. ஆனால் அதைக்கூட அந்தத் தொட்டிகள் செய்யவில்லை. அங்கிருந்த இரண்டு தொட்டிகளுமே பாழடைந்து வறண்டு கிடந்தன. கேட்டபோது, "இதைக் கவனிப்பதற்கும் யாரும் வருவதில்லை. அதனால் நாங்களே பழையபடி மூங்கில் குழாய்களை உபயோகப்படுத்தி ஊருக்குள் குடிநீரை எடுத்துச் சென்று கொண்டிருக்கிறோம்" என்றார்கள் அகமலை வாசிகள்.

இத்தனைக்கும் என்ன காரணம்? போக்குவரத்துக்கான சாலை வசதி அறவே கிடையாது என்கிற ஒரேயொரு காரணம்தான். ஒரு தீப்பெட்டி வாங்க வேண்டும் என்றாலும் ஒன்று பத்து கி. மீ. இறங்கி மலையடிவாரத்திலுள்ள சோத்துப் பாறை என்ற இடத்திற்கு வந்து மறுபடியும் டவுன் பஸ் மூலம் பத்து கி.மீ. தூரத்தைக் கடந்து பெரியகுளம் வர வேண்டும். இல்லையென்றால் வேறு பக்கமாகப் பதினைந்து கி. மீ. இறங்கி, மறுபடியும் அடிவாரத்திலிருந்து பத்து கி.மீ. தூரத்தைக் காட்டுப் பாதையில் நடந்து சென்று போடிநாயக்கனூர்தான் செல்ல வேண்டும். இந்த நிலையில் யார்தான் அந்த மலைக்கிராமங்களுக்குச் சென்று பணிபுரிய முன்வருவார்கள் என்று அரசாங்கம் நினைக்கிறதோ தெரியவில்லை. இது காரணமாகத்தான் பள்ளிகளும் சுகாதார நிலையமும், தண்ணீர்த் தொட்டிகளும் மக்கள் வரிப் பணத்தில் கட்டியும் பயனின்றி பாழாகிக் கொண்டிருக்கின்றன.

அகமலை கிராமமும் மற்ற மலைக் கிராமங்களும் உத்தமபாளையம் தாலுகாவைச் சேர்ந்தவை. அதனால் அந்த கிராம மக்கள் கோர்ட் விஷயங்களுக்காக உத்தமபாளையம்தான் சென்றாக வேண்டும். அதற்காக முதல் நாள் இரவே புறப்பட்டு இருபத்து நான்கு கி.மீ. தூரத்தை, மலைப் பாதைகள், காட்டுப் பாதைகள் மூலமாகக் கடந்து போடி நாயக்கனூர் சென்று தங்கி மறுநாள்தான் உத்தமபாளையத்தை அடைய வேண்டும். போகவர மொத்தத்தில் மூன்று நாள் கூலி இழப்பு. அதுவே பெரியகுளம் தாலுகாவில் இருந்தால் வெறும் பத்து கி. மீ. தூரம் இறங்கி வந்தால் போதும். அடிவாரத்திலுள்ள சோத்துப் பாறையிலிருந்து டவுன் பஸ் மூலம் பெரியகுளத்தை அடைந்துவிடலாம். இதற்கு அதிகாலையில் புறப்பட்டாலே போதுமானது. அதனால் தங்கள் கிராமங்களை பெரியகுளம் தாலுகாவில் இணைத்தால் மிகவும் புண்ணியமாய்ப் போகும் என்று சொன்னார்கள்.

சாலை வசதி இல்லாததால், அங்குள்ள சாதாரண மக்களுக்குத்தான் இது போன்ற கஷ்டங்களும் இழப்புகளும் என்பதில்லை. அங்குள்ள அலங்காரம் என்ற மலைக் கிராமத்தில் எஸ்டேட் வைத்திருக்கும் ஜெயச் சந்திரன் என்பவரைச் சந்தித்துச் சாலை வசதி பற்றிக் கேட்டபோது மிகவும் நொந்து போய்ப் பேச ஆரம்பித்தார்.

"இங்கு மொத்தம் 17,700 ஏக்கர் நிலம் சாகுபடியிலிருக்கிறது. அதில் காப்பி, ஏலம், வாழை, ஆரஞ்சு, பலா, மிளகு, எலுமிச்சை, நாரத்தை, மா, இலவு என்று ஆண்டொன்றுக்குச் சுமார் ஏழு கோடி ரூபாய் மதிப்புள்ள பொருள்கள் விளைவிக்கப்படுகின்றன. நில வரி மூலமாக மட்டும் அரசுக்கு ஆண்டொன்றுக்குச் சுமார் அறுபதாயிரம் ரூபாய் வருமானம் கிடைக்கிறது. இங்குள்ள சுமார் பத்தாயிரம் மக்கள் தொகையோடு அவ்வப்போது அறுவடைக் காலங்களில் சுமார் ஐயாயிரம் பேர் வேலைக்காக அடிவாரத்திலிருந்து வந்து போகின்றார்கள். நிலைமை இப்படியிருந்தும் அரசாங்கம் போக்குவரத்துக்கான சாலை வசதி பற்றி மூச்சுவிடாமல் இருப்பதுதான் எங்களுக்கு ஆச்சரியமாக இருக்கிறது. இத்தனைக்கும் அடிவாரத்திலுள்ள சோத்துப் பாறையிலிருந்து மலைமேலுள்ள நெடும்பட்டித்தளம் என்ற இடம் வரை சுமார் பத்து கி.மீ. தூரத்திற்கு ஏற்கெனவே லாரி போக்குவரத்துக்கான சாலை வசதி செய்யப்பட்டிருந்தும் அரசு அதைப் பராமரிக்காததால் அனைத்தும் வெள்ளத்தால் அரிக்கப்பட்டும், புதர்களால் மண்டப்பட்டும் பாழடைந்துவிட்டன. இப்போது எந்த வாகனமும் அதில் செல்ல முடியாது. குதிரைகளும், கழுதைகளும்கூட மிகவும் சிரமப்பட்டுத்தான் செல்கின்றன என்றால் மனிதர்கள் எப்படிச் செல்வார்கள் என்று நீங்களே புரிந்து கொள்ளுங்கள்.

* பாழடைந்து கொண்டிருக்கும் சுகாதார நிலையம்.
* கேட்பாரற்றுக் கிடக்கும் குடிநீர்த் தொட்டி.



"மலையில் வசிக்கும் அனைத்து மக்களுக்கான அரிசி, பருப்பு, உப்பு என்று எல்லாப் பொருள்களும் குதிரைகள், கழுதைகள் ஆகியவற்றின் மூலமாகவும், தலைச் சுமை மூலமாகவும்தான் கொண்டு வர வேண்டியிருக்கிறது. அதே போல் இங்கு விளையும் பொருள்களையும் அப்படித்தான் கீழே கொண்டு



செல்ல வேண்டும். அதனால் எங்களுக்குப் போக்குவரத்துச் செலவும் நஷ்டமும் அதிகம்.

"உதாரணமாக இருபது ஏக்கர் ஆரஞ்சு பயிர் செய்யும் ஒரு விவசாயி, அறுவடையான ஆரஞ்சுப் பழங்களைக் குதிரைகளின் மூலமாகவும், கழுதைகள் மூலமாகவும் கொஞ்சம் கொஞ்சமாகக் கீழே கொண்டு செல்வதற்குள் அவற்றில் பாதி அழுகிக் கெட்டுப் போய்விடும். அதனால் ஒரு லட்ச ரூபாய் மதிப்புள்ள ஆரஞ்சுகளை விளைவித்த அவருக்கு ஐம்பதாயிரம் ரூபாய்தான் கிடைக்கும். ஐம்பதாயிரம் ரூபாய் நஷ்டம்தான். அதேபோல் விவசாய இடு பொருள்களைக் கொண்டுவருவதற்கும் எங்களுக்கு ஏகப்பட்ட செலவாகிறது. உதாரணமாக மலையடிவாரத்திலுள்ள ஒரு விவசாயி ஓர் ஏக்கருக்கு முந்நூறு ரூபாய் செலவு செய்தால், நாங்கள் அதே அளவுக்கான விவசாய இடு பொருள்களுக்காக மூவாயிரம் ரூபாய் செலவு செய்கிறோம்.

"லாரிப் போக்குவரத்துக்கு உதவும்படியான சாலை வசதி இல்லாததுதான் இத்தனை நஷ்டங்களுக்கும் காரணம். நாங்களும் சோத்துப்பாறை என்ற மலையடிவாரத்திலிருந்து அகமலை கிராமம்வரை சுமார் இருபத்திரண்டு கி. மீ. தூரத்திற்கு வாகனப் போக்குவரத்துக்கான சாலை வசதி செய்ய வேண்டுமென்று சம்பந்தப்பட்டவர்களுக்கு மனு மேல் மனுவாகக் கொடுத்துக் கொடுத்து அலுத்துப் போனோம். நேரில் போய்க் கேட்டால், 'அதற்கெல்லாம் வனத் துறையினரிடம் அனுமதி வாங்க வேண்டும்; இந்திய அரசிடம் அனுமதி வாங்க வேண்டும்' என்ற ஒரே பல்லவியைத்தான் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். 'ஏற்கெனவே பத்து கி. மீ. தூரத்திற்குப் போடப்பட்டிருக்கும் சாலையையாவது பழுது பார்த்துக் கொடுத்துப் பராமரிக்கலாமே!' என்றால் பேசாமல் இருந்துவிடுகிறார்கள். குறைந்தபட்சம் அதைப் பழுது பார்த்துக் கொடுத்தாலாவது எங்களுக்கான பாதிக் கஷ்டங்கள் குறையும். சாலை வசதி மட்டும் எங்களுக்கிருந்தால் இப்போது விளைவிக்கும் பொருள்களைப் போல் இரு மடங்கு பொருள்களை விளைவிக்க முடியும். ஆனாலும் அரசு கவனிக்கவில்லை. அதனால்தான் கல்கி பத்திரிகை மூலமாகவாவது ஒரு தீர்வு ஏற்படாதா என்ற ஆசையில் உங்களுக்கு எழுதினோம்" என்று வேதனையோடு முடித்தார் ஜெயச்சந்திரன்.

ஜெயச்சந்திரன் சொன்னது முற்றிலும் உண்மை என்பதை நாங்கள், அடிவாரத்திலிருந்து மலையேற ஆரம்பித்ததுமே உணரத் தொடங்கினோம். சுமார் ஒரு கி. மீ. தூரம் நடந்ததுமே எங்களுக்கு மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க ஆரம்பித்துவிட்டது. பிறகு குதிரையின் மேல் ஏறித்தான் பிரயாணத்தைத் தொடர வேண்டியிருந்தது. நாங்கள் சென்ற வழியில் ஒரு மலைப் பகுதிக் கிராமத்திலிருந்து இருவர் ஒரு டோலியில் (அட்டைப் படம் பார்க்க) ஒரு பெண்ணைச் சுமந்து கொண்டு கீழிறங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களை நிறுத்தி விசாரித்தபோது, உடல் நலமில்லாதவர்களைக் குதிரையில் வைத்துக் கொண்டு வர முடியாது என்பதால்தான் இப்படி டோலி கட்டித் தூக்கிக் கொண்டு பெரியகுளத்திலுள்ள மருத்துவமனைக்குச் சென்று கொண்டிருப்பதாகச் சொன்னார்கள். சில சமயங்களில் இப்படிச் சிரமப்பட்டு டோலி கட்டித் தூக்கிக் கொண்டு வந்தாலும் அவசர மருத்துவச் சிகிச்சை கிடைக்காமல் வரும் வழியிலேயே சிலர் இறந்து போவதும் உண்டு என்று அவர்களே சொன்னார்கள்.

இந்தக் கம்ப்யூட்டர் யுகத்திலும் நோயாளிகளை இப்படி டோலி கட்டித் தூக்கி வரும் அவலத்தை என்னவென்று சொல்வது? செங்குத்தான — கரடு முரடான அந்த மலைப் பாதையின் சில இடங்களில் குதிரைகளே சிரமப்பட்டுத்தான் ஏறிச் சென்றதென்றால் மனிதர்கள் எம்மாத்திரம்? அதுவும் சுமைகளைச் சுமந்து கொண்டு செல்வது எப்படிப்பட்டதொரு மனித வதை! மாடு வதைகளைக் கூடப் பொறுத்துக் கொள்ள முடியாமல் ஆர்ப்பாட்டம் செய்கிற நாமா இப்படிப்பட்டதொரு மனித வதைகளைக் கண்டு மௌனமாயிருக்கிறோம்! அப்படியானால் நமது இரக்கமெல்லாம் வெறும் வேஷங்கள்தானா!

— இப்படி யோசித்துக் கொண்டே சுமார் ஆறு கி. மீ. தூரம் பயணம் செய்து தலைசி ஆறு என்ற ஓர் அற்புதமான, எழில் நிறைந்த இடத்தை அடைந்தபோதுதான் சொக்கனலை கிராமத்து மக்களைச் சந்தித்தோம். (அட்டைப் படத்தில் கூட்டமாக உள்ளவர்கள்.) நாங்கள் வருவதை ஜெயச்சந்திரன் மூலமாக முதல் நாளே கேள்விப்பட்ட அவர்கள், ஏதோ நாங்களெல்லாம் பெரிய பெரிய ஆபீஸர்கள் — எங்களிடம் முறையிட்டால் தங்களின் எல்லாக் குறைகளும் தீர்ந்து போகும் என்ற ஆர்வத்தில் சுமார் முந்நூற்றுக்கும் மேற்பட்டவர்கள் ஒன்று சேர்ந்து சுமார் ஐந்து கி. மீ. தூரம் இறங்கிவந்து எங்களுக்காகக் காத்திருந்து, "எப்படியோ சாமி, எங்களுக்கு ரோடு வசதி செஞ்சு கொடுத்திட்டீங்கன்னா போதும் சாமி! உங்களைக் கோயில் கட்டிக் கும்பிடுவோம்!" என்று, நம்பிக்கையோடு முறையிட்டார்கள்.

"நாங்கள் பத்திரிகையாளர்கள். உங்களுடைய கஷ்டங்களை எழுதத்தான் முடியுமே தவிர வேறொன்றும் செய்ய முடியாது. நாங்கள் எழுதுவதோடு நின்றுவிடாமல், உங்கள் மாவட்டக் கலெக்டரிடம் சென்று உங்கள் குறைகளையும் கஷ்டங்களை

# கட்டடம் கட்டுவோர், கட்டடக் கலைஞர்கள் மற்றும் கான்டிராக்டர்களுடன் அரசு தனது பிணைப்பை வலுப்படுத்துகிறது

நிரந்தரமான, எப்பொழுதும் மாறுதல் அடையாத உயர்ந்த தரமே அரசு சிமெண்டுகள் மீது அனைவரும் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்திருப்பதன் ரகசியம். அரசு போர்ட்லண்ட் சிமெண்டின் உன்னதத்தரம் கட்டடம் கட்டுவோர், கட்டடக் கலைஞர்கள் மற்றும் கான்டிராக்டர்கள் அதை உபயோகிப்பதில் பெருமிதம் கொள்ளச் செய்கிறது. குறிப்பிட்ட நிர்ணயங்களுக்கு ஏற்பத் தயாரிக்கப்படுவதால் அரசு சிமெண்ட் இன்று தேர்ந்தெடுத்து வாங்க மிகச் சிறந்ததாக இருக்கிறது.




தமிழ்நாடு சிமெண்ட்ஸ்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
(ஒரு தமிழ்நாடு அரசு நிறுவனம்)
எல் எல் ஏ பில்டிங், 735, அண்ணாசாலை,
சென்னை-600 002
போன் : 89161 (4 லைன்கள்)
டெலெக்ஸ் : MS 6080




தொழிற்சாலை : ஆலங்குளம் 626127,
அரியலூர் 621704, மாயனூர் 636108
தமிழ்நாடு.
பெங்களூர் டிப்போ : 19E, மைசூர் பிரிவுச் சாலை பெங்களூர்-560023.
போன் : 357659
எர்ணாகுளம் டிப்போ :
மேற்பார்வை கேரளா ஸ்டேட் வேர்ஹவுசிங் கார்ப்பொரேஷன்,
திருப்புணித்துரா
(எர்ணாகுளம் மாவட்டம்) போன் : 7965.
புனலூர் டிப்போ : VIII/9 ரெயில்வே ரோடு,
ரெயில் நிலையத்திற்கு எதிரில், புனலூர்,
(கொல்லம் மாவட்டம்)




# அரசு

## போர்ட்லண்ட் சிமெண்ட்

புதியான வகையில் வலுப்படுத்துகிறது

DIPR: 8331/363-86: Efficient

“என் கணவர் எப்போதும் சரியான முடிவையே எடுப்பார், உதாரணத்திற்குப் பாருங்களேன்! “யூனிட் இணைந்த ஆயுள் இன்சூரன்ஸ்” திட்டத்தில் (ULIP) சேரலாம் என்று அவர் எடுத்த முடிவு!

ULIPல் அப்படி என்ன விசேடம் என்று நீங்கள் கேட்கலாம் . . . . நான் சொல்கிறேன் . . . . ஏன் என்றால் ULIP பற்றின எல்லா விவரங்களும் எனக்குத் தெரியும்.

சிறந்த திரும்பப் பெறும் பண அளவு, விபத்து மற்றும் ஆயுள் காப்பீடு அடங்கிய திட்டம் ULIP மட்டுமே. எங்கள் குடும்பத்திற்குத் தெரிந்த நண்பர் ராமகிருஷ்ணன் சமீபத்தில் ஒரு ஸ்கூட்டர் விபத்தில் இறந்து விட்டார். ULIP அவர் குடும்பத்திற்கு ரூ. 45,000 கொடுத்தது. இவ்வளவிற்கும் அவருடைய முதலீடு இரண்டு ஆண்டுகளில் ரூ. 6000 மட்டுமே.

வேறு எந்த திட்டத்தில் இவ்வளவு அனுகூலங்கள் உள்ளது?

ஆண்டு ஒன்றுக்கு என் கணவர் ULIPக்கு ரூ. 3000 மட்டுமே செலுத்துகிறார். ஆனால் இந்த மொத்த தொகைக்கும் வருமான வரி சட்டம் செக்ஷன் 80C பிரிவின்படி வரிவிலக்கு உண்டு.

பத்து ஆண்டுகளில் செலுத்தப்பட்ட தொகை ரூ. 30,000 மட்டுமே ஆயினும் குறைந்த பட்ச திரும்பப் பெறும் தொகை ரூ. 50,000 ஆக இருக்குமே!

அன்பு நிறைந்த என் கணவர் தம் குடும்ப நன்மைக்கு இதைச் செய்தார் என்ற மனநிறைவு மட்டுமின்றி அவருடைய முதலீடு “யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா” வின் பாதுகாப்பில் இருக்கும் என்ற நம்பிக்கையும் உண்டு.

உங்கள் குடும்ப நன்மைக்கு மிக எளிதாக இதைச் செய்யலாம். இன்றே கனரா வங்கியின் கிளை அல்லது யூனிட் ட்ரஸ்டின் அங்கீகாரம் பெற்ற ஏஜண்ட் மற்றும் முக்கிய பிரதிநிதியை அணுகுங்கள்.”

மேலும்!
திட்ட இறுதியில்
இலக்குத் தொகைக்கு போனஸ்!
5% பத்து வருட திட்டத்துக்கு
7.5% பதினைந்து வருட திட்டத்துக்கு





## யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா

(அரசு பொது உடைமை நிதி நிறுவனம்)
தலைமை அலுவலகம், பம்பாய் 400 020.

பிராந்திய அலுவலகம்:
ரெஜினா மான்ஷன், 46, செகண்ட் லைன் பீச்,
சென்னை 600 001. போன்-27433/24146

ஆந்திரப்பிரதேச அலுவலகம்:
27/11/68, மேரி சாலை, கவர்னர்பேட்டை,
விஜயவாடா-520 002. போன்-63964

கேரளா அலுவலகம்:
XII/758, தேக்கமடம் சாலை,
திருச்சூர் 680 001. போன்-24690

தமிழ்நாட்டில் முக்கிய பிரதிநிதிகள்:

- சேலம். திரு N.K. இங்கர்சால், சேலம்-636 002 போன்-51520
- திருச்சி. திரு. M. ராமலிங்கம், திருச்சி-620 001 போன்-28280
- வட ஆற்காடு. திரு P. நாராயணன், வேலூர்-632 012 போன்-21575
- கோவை, பெரியார், நீலகிரி. திரு. A. தனபால், கோயம்புத்தூர்-641 018 போன்-34776
- மதுரை, ராமநாதபுரம். திரு M. ராமமூர்த்தி, மதுரை-625 002 போன்-அலுவலகம்-30160 வீடு 43179
- தஞ்சை. திரு K. முத்துசாமி, தஞ்சாவூர்-613 007 போன்-வீடு-1224

# ULIP-நேசப்பிணைப்பிற்கோர் நேர்த்தியான திட்டம்.

யும் நேரடியாக எடுத்துச் சொல்கிறோம். அவர்தான் முயற்சி எடுக்க வேண்டும். அது சரி, நீங்கள் ஓட்டுப் போட்டீர்களே, யாருக்குப் போட்டீர்கள்? அவர்களிடம் சென்று நீங்கள் முறையிடலாமே?'' என்று அவர்களைக் கேட்டோம்.

''எம்.ஜி. ஆருக்குத்தான் சாமி ஓட்டுப் போட்டோம்!''

''எதற்காக எம்.ஜி. ஆருக்குப் போட்டீர்கள்?''

''சோறு போட்டாங்க; ஓட்டுப் போட்டோம். அது தப்பா சாமி? சோறு போட்டவங்களை ஏமாத்தலாமா?''

''ஏமாத்தறது தப்புத்தான். ஆனால் உங்களுக்கு ரோடு போட்டுத் தரவில்லையே. அதனால் அரசாங்கமே உங்களை ஏமாற்றுவதாகத்தானே அர்த்தம்? அவர்கள் மட்டும் உங்களை ஏமாற்றலாமா?''

''அதெல்லாம் எங்களுக்கு என்ன சாமி தெரியும். உங்களை மாதிரி அவங்களெல்லாம் இங்கே வந்தாத்தானே எங்கள் கஷ்டங்களைச் சொல்ல முடியும். நீங்க வந்திருக்கீங்க. உங்ககிட்டே சொல்றோம் சாமி!'' என்றார்கள் உழைப்பைத் தவிர வேறு எதையும் கண்டறியாத அந்த அப்பாவி மக்கள்.

பளியர்கள் என்ற அந்த மலைவாசிப் பெண்களிடம் தங்க நகைகளைப் பற்றிக் கேட்டபோது, ''தாலி வாங்கக்கூட எங்களிடம் வசதியில்லை சாமி. அதனால் எங்கள் தாலி என்பதே வெறும் மஞ்சள் கயிறுதான். இதில் தங்கத்திற்கு எங்கே போவோம்?'' என்றார்கள்.

''வெறும் மஞ்சள் கயிறே தாலியாகி விடுமா? தாலி என்று எதுவுமே அதில் இல்லையா?'' என்று நாங்கள் சந்தேகத்தோடு கேட்டபோது, செல்வி என்ற இளம் பெண் ஒருத்தி எங்களுடைய அந்தச் சந்தேகத்தால் எழுந்த வேதனை கலந்த ரோசத்தோடு தன் கழுத்திலிருந்த மஞ்சள் கயிறைக் கழற்றி எங்களிடமே கொடுத்துப் ''பாருங்க சாமி!'' என்றபோது நாங்கள் அதிர்ந்து போய்விட்டோம்.

அந்த மஞ்சள் கயிற்றில் குடிசைச் சாவியும், இரு ஸேஃப்டி பின்களும்தான் இருந்தனவே தவிர, தாலி என்று எதுவுமே இல்லை. உண்மையிலேயே நாங்கள் ஆச்சரியப்பட்டு அவர்களின் திருமண முறையைப் பற்றி விசாரித்தபோது அது எங்களை மேலும் ஆச்சரியப்பட வைத்தது.

அவர்களிடம் திருமணம் என்று தனியாக எந்தச் சடங்கும் கிடையாதாம். பெண்ணைப் பெற்றவர்கள் மாப்பிள்ளை தேடி அலைவது—பிள்ளையைப் பெற்றவர்கள் பெண் தேடி அலைவது — வரதட்சணைக் கேவலங்கள் என்று எதுவுமே கிடையாதாம். ஓர் ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் விரும்பினால், அந்த ஆண் அந்தப் பெண்ணைத் தன் குடிசைக்கு அழைத்துச் சென்று மஞ்சள் கயிற்றைக் கட்டிவிடுவான். பிறகு அந்தப் பெண் அவன் குடிசையிலேயே தங்கிவிடுவாள். மற்றவர்களும் அவர்கள் திருமணம் செய்து கொண்டதாக ஏற்றுக் கொண்டு விடுவார்கள்; அவ்வளவுதானும்!

திருமணம் என்பதுகூட அவர்கள் வாழ்க்கையில் எத்தனை நாகரிகமானதாகவும், சுலபமானதாகவும் இருக்கிறது என்று வியந்து கொண்டே அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு மலையின் பல பகுதிகளுக்கும் சென்று சுற்றிப் பார்த்து மக்களைச் சந்தித்து விட்டு அடிவாரத்திற்குத் திரும்ப ஆரம்பித்தபோது நன்றாக இருட்டிப் போய்விட்டது. கரடு முரடான அந்த மலைப் பாதைகளில் கழிகளை ஊன்றிக் கொண்டு இருட்டில் தடுமாறி இறங்கியபோது பாதையின் இரண்டு பக்கங்களிலுமிருந்த முட்செடிகள் பட்டுப் பட்டு எங்கள் உடலில் ஏற்பட்ட ரத்தக் கீறல்களின் வலியைவிட, இப்படிப்பட்டதொரு உழைப்புக்கு அஞ்சாத மன வளம் மிக்க உயர்ந்த மக்களை இன்னமும் அடிப்படைக் கல்வி வசதிகூடக் கொடுக்காமல், மருத்துவ வசதிகூடக் கொடுக்காமல், போக்குவரத்துக்கான சாலை வசதிகூடக் கொடுக்காமல், அரசாங்கம் ஏமாற்றிக் கொண்டிருக்கிறதே என்ற மன வலிதான் அதிகமாக இருந்தது.

— பிரின்ஸ்

அட்டை வண்ணப்படங்களும்,
படங்களும்: மனோ.

''புரோக்கர் பொன்னுசாமி வீடு எங்கேங்க இருக்கு?''

''வழி சொல்றேன். அதுக்குக் கமிஷன் எவ்வளவு தருவீங்க?''

''நீங்க யாருங்க?''

''அவரோட மகன்.''

— ஈரோடு மரகதம் மணாளன்.





அவன்: ''நம் தொகுதி எம். எல். ஏ. சட்டசபையில் எப்பவாவது பேசியிருக்காரா?''

இவன்: ''பேசியிருக்காரே! பக்கத்து சீட் எம். எல். ஏ. யுடன்!''

— உ. ராஜாஜி.



• சப் – இன்ஸ்பெக்டர்

# வாரத்துக்கு நாலு 'ஆக்ஸிடெண்ட்'



• தங்கமணி.

சமீபத்தில் 'ஆக்ஸிடெண்ட்' கள் அதிகம் நடந்த இடம் எது என்று யாராவது கேட்டால், தயங்காமல் கள்ளிக்குடியைக் கைகாண்பித்து விடலாம்.

அவ்வளவு விபத்துக்கள். வாரத்துக்கு மூன்று நான்கு விபத்துக்கள். விருதுநகரிலிருந்து திருமங்கலம் வரும் வழியில் இடைப்பட்ட பதினாறு மைல் நீள நெடுஞ்சாலையில் தான் இவ்வளவும் நடக்கிறது. பெரிய அளவில் தொடர்ந்து நிறைய விபத்துக்கள் நடந்து கொண்டிருக்கின்றன. ஜனங்களுக்கு இதைப் பற்றிப் பேசும்போது ஒரு கலவரம் தெரிகிறது. இவ்வளவு விபத்துக்கள் அடுத்தடுத்து நடப்பதற்கு என்னதான் காரணம்?

திருமங்கலத்திலிருந்து விருதுநகர் போகிற வழியில் உள்ள கள்ளிக்குடி கிராமத்திற்குப் போனோம். நானூறு பேர் இருக்கிற சிறு கிராமம். 'விபத்து' பற்றி நாம் விசாரிக்கிற போதே ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமாய்ச் சொன்னார்கள். சிலர் விபத்துக்கள் தொடர்ந்து நடப்பதற்கு ஏதாவது 'ஆவிகள்' சமாச்சாரம் காரணமாக இருக்கலாமென்றார்கள். உள்ளூரிலேயே 'தமிழ்நாடு சேவா சங்கம்' வைத்திருக்கின்றவரான பி.எம். தங்கமணியைப் பார்த்தோம். அவர் சொன்னார்.

"இங்கே நடக்கிறதிலே அநேகம் விபத்துக்கள் மேஜர்தான். எத்தனையோ பேர் இறந்திருக்காங்க. தேசிய நெடுஞ்சாலை ரோடு. (திருமங்கலம் to விருதுநகர்.) துலுக்கப்பட்டி சிமெண்ட், தூத்துக்குடி உப்பு, ஸ்பிக் உரம் எல்லாம் ஏத்தின லாரிகள் அடிக்கடி போயிக்கிட்டிருக்கும். பஸ் போக்குவரத்து ஜாஸ்தி. ஆனா ரோடு ரொம்பக் குறுகலான ரோடுங்கிறதுனாலே விபத்துக்கள் அதிகம் நடக்கலாம். ரோட்டுக்குப் போய்ப் பாருங்க. பஸ், லாரி எல்லாம் என்ன வேகத்துலே போகுதுன்னு தெரியும். வேகத் தடை 'எதுவும் போடாம இருக்கிறவரை ஒன்றும் சரிப்படப் போறதில்லே." என்றார்.

மெயின் ரோட்டிலேயே ரோட்டை மறித்த மாதிரி சில கடைகள். கடைகளை 'ஹைவேஸ்' காரர்கள் அகற்றியும், கூடக் கட்சி சிபாரிசுகளினால் மீண்டும் அதே இடத்தில் வந்துவிட்டன. ரோட்டோர வியாபாரிகளிடம் பேசினபோது சிலர், "ஏதோ சாமி

காரியத்தினுலேதான் இந்த மாதிரி பலி நடக்குது'' என்ருர்கள். நாம் போனதற்கு முந்தின இரண்டு நாட்களும் அடுத்தடுத்து விபத்துக்கள். ஒரு தீப்பெட்டி லாரி முதல் நாள் முழுசாய் எரிந்துபோக, மறுநாள் மாட்டு வண்டியின்மேல் 'திருவள்ளுவரின்' உரசல்! ஊர்க்காரர்கள் திரண்டு வந்து பஸ்களை மறித்திருக்கிருர்கள். கொஞ்ச நேரத்தில் லாரிகளும், பஸ்களுமாய் நீண்ட க்யூ. உடனே ஸ்பீட் ப்ரேக்கர் போட்டே ஆக வேண்டும் என்று போலீசாரிடம் வற்புறுத்தின பிறகு, நகர்ந்திருக்கிருர்கள் ஊர்க்காரர்கள்.

சம்பந்தப்பட்ட உள்ளூர் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனேம். சப்—இன்ஸ்பெக்டரான எல். சுப்ரமணியனைப் பார்த்தபோது விரிவாகச் சொன்னுர்....

''85ல் மட்டும் இந்த பன்னிரண்டு கி.மீ.க்குள்ளே 42 கேஸ்கள் பதிவாகியிருக்கு. இப்போ இரண்டு மாசத்திலேயே ஏழெட்டு கேஸ்கள் ஆயிடுச்சு. இதெல்லாம் எங்க பார்வைக்கு வந்த கேஸ்கள் மட்டுந்தான். இங்கே 'தேசிய நெடுஞ்சாலை'யிலே வர்ற வண்டிகள் என்ன வேகத்திலே போகுதுங்கிறீங்க? எப்பவாவது பேருக்கு சில வண்டிகளை நிறுத்தி கேஸ் போடுவோம். அதோடு சரி. இதுக்குன்னு ஃப்ளையிங் ஸ்குவாட் மாதிரி தனியா இருந்தா, வர்ற வண்டிகளோட வேகத்தைக் கட்டுப்படுத்திவிட முடியும். தேசிய நெடுஞ்சாலையிலே ஸ்பீட் பிரேக்கர் போடக்கூடாதுன்னு ரூல் இருக்கு. அதனுலே ஒண்ணும் செய்ய முடியலே.. ஆனுல் ஊர்க்காரங்க 'ஸ்பீட் பிரேக்கர்' போட்டே ஆகணும்னு வற்புறுத்தருங்க. மேலிடத்துக்கு இது பற்றி எழுதலாம்னு நினைக்கிறேன்'' என்ருர்.

கூடவே இருந்த போலீஸ்காரர் நாம் பேசிக்கொண்டிருக்கும்போதே தொப்பியைக் கழற்றின கையோடு, ''அதெல்லாம் ஒண்ணுமில்லே சார்.... இந்த ரோட்டிலே மட்டும் இவ்வளவு ஆக்ஸிடெண்ட் நடக்குறதுக்குக் காரணம் இல்லாம இருக்குமா? 'வழிவிடு விநாயகர்' மாதிரி 'வழிவிடு கறுப்பு'ன்னு ஒரு கோவில் வைச்சாப் போதும் சார்.... ஆக்ஸிடெண்ட் ஒண்ணும் நடக்காது பிறகு. அது வைக்காததாலேதான் 'கறுப்பு' கோபத்துலே இப்படி நடக்குது'' என்ருர்.

போலீஸ்காரருக்குத்தான் எவ்வளவு 'சுருக்கான' வழிகள் தெரிந்திருக்கின்றன!

'ஹைவேஸ்' அலுவலர் ஒருவரைப் பார்த்த போது பெயர் தெரிவிக்க விரும்பாத அவர் சொன்னுர்:

விபத்து நடக்கிறது சகஜம்ங்கிறது தெரிந்திருந்தும் யாரும் 'ஸ்பீட்' குறைச்சலாப் போறதில்லே. பி.ஆர்.சி.யா இருந்தாலும் சரி, நேசமணி, கட்டபொம்மன் போக்குவரத்தாயிருந்தாலும் சரி, எல்லோருக்கும் பிரயாணிகளை ஏத்துறதுலே போட்டி. அதனுலே ஒவ்வொரு பஸ்ஸும் படு ஸ்பீட். விருதுநகரிலிருந்து மதுரை 46 கி.மீ. ஆனுல் இந்தத் தூரத்திற்கு ஒரு பிரைவேட் பஸ்ஸுக்கு 5ρ நிமிஷத்துலே போக பெர்மிஷன் கொடுத்திருக்காங்க. அப்புறம் அவன் ஏன் ஸ்பீடாகப் போகமாட்டான்னு சொல்லுங்க.''

இதையெல்லாம்விட நாம் கேள்விப்பட்ட இன்னெரு கொடுமையான விஷயம்....

விபத்தாகி, பஸ்ஸோ, வேனே கவிழ்ந்து கிடக்கிறது; உள்ளே இருந்தவர்கள் அடிபட்டபடியோ, பிணமாகவோ, சரிந்து கிடக்கிருர்கள். இந்த நிலையில் பக்கத்து ஊர்களிலிருந்து வருகிற கும்பல் நுழைந்து, இறந்தவர்களின், காயம்பட்டுக்கிடக்கின்றவர்களின் நகைகள், பணத்தையெல்லாம் சுருட்ட ஆரம்பிக்கின்றது. இறந்து கிடக்கிறவர்கள் பற்றிய துயரமோ, காயம்பட்டுக் கிடக்கிறவனுக்கு உதவ வேண்டும் என்ற சிறு மனிதாபிமான அக்கறை கூட இல்லாமல் களவாடிவிட்டு, அவர்களை அப்படியே விட்டுவிட்டுக் கிளம்பி விடுகிறது கும்பல். விபத்துக்கள் அடிக்கடி நடப்பதால், இப்படிக் களவாடிய சில கிராமங்கள் பணக்காரக் கிராமங்களாகிவிட்டன என்று பலரும் சொன்னதுபோது வருத்தப்பட்டோம்.

பேசி முடிந்து பஸ்ஸுக்காக வந்து நிற்கிறோம். ஒரு சிந்தனை எழுகிறது: தேசிய நெடுஞ்சாலையென்ருல் 'ஸ்பீட் பிரேக்கர்' அமைக்கக்கூடாது என்பது விதியாம். சென்னையிலிருந்து வருகிற வழியில் மேல்மருவத்தூர் வந்ததும் 'ஸ்பீட் பிரேக்கரை' அனுமதிப்பது மட்டும் எந்த விதியின் கீழ் வருகிறது? மனுஷர்களையெல்லாம் விட்டுவிட்டு எங்கோ அந்தரத்திலா 'விதி' தொங்கிக் கொண்டிருக்கிறது?

— யூகி.

படங்கள்: பானு

சிறுவன்: வீடுகளை எப்படிச் செய்கிருர்கள், அப்பா?

அப்பா: இது கூடத் தெரியாதா? பல ஒட்டைகளை எடுத்துக் கொண்டு ஒன்றேடொன்று இணைத்துவிடுவார்கள்!

— பிரியா பானு.



* சலீம் தமீஜுதீன், நெல்லிக்குப்பம்.

? **பஞ்சாயத்துத் தேர்தலின் போது, 'இந்த முறையும் தோல்வியைத் தாங்கிக் கொள்ளும் சக்தியைக் கருணாநிதிக்கு இயற்கை கொடுக்க வேண்டும்' என ஆர். எம். வீ. வேண்டியது பற்றி?**

! இயற்கை கொடுத்ததோ அல்லது இறைவன்தான் கொடுத்தானோ, ஆர். எம். வீக்குப் பலமான நோஸ் கட்.

* ஸ்ரீ ஸபரிதாசன், குடியாத்தம்.

? **'ராமாவரம் தோட்டத்தில் கற்பகத் தரு உள்ளது. அங்கு சென்றால் எல்லாம் கிடைக்கும்' என்று காளிமுத்து பேசியுள்ளாரே?**

! 'ராபின் மெய்ன்' என்ற கற்பகத் தருவை விடவா!

* சிவாம்பிகை, அரகண்டநல்லூர்.

? **ம. பொ. சி. யின் மகன் காலமாகிவிட்டாரே. அவரைப் பற்றி...?**

! தாம் சிறையில் அரை உடம்பாகி ஸ்ட்ரெச்சரில் வீடு வந்து சேர்ந்த போது கூடக் கலங்காத ம. பொ. சி. யின் உள்ளம் கரகரவென்று கண்ணீர் உகுத்தது. 'நான் இன்னும் உயிரோடு இருந்து கொண்டிருப்பதால் ஆளுனர், முதல்வர் முதல் தமிழரசுக் கட்சியின் சராசரித் தொண்டர் வரை என் மகன் உடலுக்கு மரியாதை செலுத்துவதைக் கண்டேன்' என்று விரக்தியில் நாத்தழுதழுக்கப் பேசினார் ம. பொ. சி. தந்தையின் பெயரைப் பயன்படுத்தி காரியங்களைச் சாதித்துக் கொள்ளாதவர் திருநாவுக்கரசு. எந்த ஒரு பொதுக் கூட்டத்துக்கு வந்தாலும் பிறரை உபசரிப்பாரேயன்றி தாம் நாலாவது வரிசையில் கூட உட்கார மாட்டார். ஓரமாய் நின்றவாறே இருப்பார். அந்த அடக்கம் ஆற்றலுக்குத் தடையாகவில்லை. தமிழரசுக் கட்சியின் நிர்வாகப் பொறுப்பு, செங்கோல் பத்திரிகையை நிர்வகிக்கும் பொறுப்பு, குடும்பப் பொறுப்பு எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்டு ம. பொ. சி. தமது முழு நேரத்தையும் பொது வாழ்வுக்கு அர்ப்பணிக்க உதவி வந்தார். இனி...?

* எல். ஹரி, குடியாத்தம்.

? **அரசுடைமை ஆக்கப்பட்ட வங்கிகளில் எல்லாப் பிரிவுகளுக்கும் போதுமான ஆட்கள் இருந்தும் வேலைகள் சரிவர நடப்பதில்லையே?**

! அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறீர்கள்? வங்கிக்குச் செல்லும் ஒவ்வொரு முறையும் மனம் நொந்து போகிறது. காலை எட்டரை மணிக்கு வங்கி துவங்குகிறது என்றால், பலர் அந்த நேரத்திற்கு வந்து சேருவது கூடக் கிடையாது. தப்பித் தவறி வந்துவிட்டாலும் நிதானமாகப் பக்கத்து ஸீட் காரர்களிடமெல்லாம் குசலம் விசாரித்து விட்டு (அதுவும் பெண்களாக இருந்தால் கேட்கவே வேண்டாம்!) அவரவர் ஸீட்டுக்குச் செல்லக் குறைந்தது கால் மணி நேரமாவது ஆகும். அப்புறம் அவர்கள் நிதானமாக வேலையை ஆரம்பித்து...... உண்மையில் வங்கிக்குச் சென்று பணம் எடுக்கும் ஒவ்வொரு முறையும், நம் பணத்தைத்தான் நாம் எடுத்து வருகிறோம் என்ற உணர்வே வருவதில்லை. ஏதோ அந்த வங்கி ஊழியர்களிடம் கெஞ்சிக் கேட்டுக் கடன் வாங்கி வருகிற உணர்வுதான் ஏற்படுகிறது. பிச்சை போடுவது கூட இன்னும் நேர்த்தியாக நடக்கும்.

* மு. மேத்தா ப்ரியன், துடுப்பதி.

? **திருவையாறு தியாகராஜர் விழாவில் டெலிவிஷன்காரர்கள் மூன்றரை லட்ச ரூபாய் மதிப்புள்ள கேமராவைத் தொலைத்து விட்டார்களாமே. அதுபற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

! ம. வி. நிகழ்ச்சிகளில்தான் சுவாரஸ்யம் இல்லை. இதுவாவது இருந்துவிட்டுப் போகட்டுமே! அதுசரி, தொலைந்து போவதற்கென்ன கேமரா என்பது துக்குளியூண்டு பொருளா?

* ஜெ. முகமது பாரூக், நெல்லிக்குப்பம்.

? **நோட்டை நீட்டினால்தான் ஓட்டுப் போடுவேன் என்ற நிலை எப்போது மாறும்?**

! நாம் போடுகிற ஒவ்வொரு ஓட்டும் துப்பாக்கிக் குண்டுகள் மாதிரி சக்தி வாய்ந்தவை என்று எண்ணுகிற அளவுக்குக் கல்விக் கண்ணைத் திறந்து விடுகிற போது!




* பிரபஞ்சன்

**ராமாவரம் தோட்டத்தில் கற்பகத்தரு இருக்கிறதாமே?**

* நா. இரகுநாதன், சின்னங்குப்பம்.

? 'தமிழர்கள் இந்தி படித்தால் வெளி மாநிலங்களில் வேலைவாய்ப்புப் பெறலாம்' என்று துக்ளக் ஆசிரியர் சோ கூறியிருப்பது பற்றி....

! வேலை வாய்ப்புக்காகவோ, வியாபாரத்துக்காகவோ இந்தி படிப்பவர்களை யாரும் தடை செய்யவில்லை. ஆனால், இந்தி படிப்பதால் மட்டுமே ஓர் இந்தியனுக்கு வேலை வாய்ப்புக் கிடைத்துவிடும் என்றால் இந்திக்காரர்கள் யாரும் வேலையில்லாத் திண்டாட்டத்தால் தவிக்கக் கூடாதல்லவா! அதையும் யோசிக்க வேண்டும்.



* சோ: எங்கள்...

* ஆர். ஜி. சிவக்குமார், பழனி.

? இந்த இதழில் ஒரே ஒரு சிறுகதை மட்டும் வெளியிட்டிருப்பது மனவேதனை அளிக்கிறது. கல்கிக்குமா சிறுகதைப் பஞ்சம்?

! திரைவிழாப் படக்கதையையும் சேர்த்தால், இரண்டு கதைகள் என்பது ஒருபுறமிருக்க, பிரசுரமாகும் சிறுகதைகள் இரண்டா, நாலா என்ற கணக்கை விட, அவற்றின் தரம் முக்கியமானது என்று கருதுகிறோம். திருச்சி மாவட்ட எழுத்தாளர் சங்கம் ஒவ்வொரு மாதமும் பிரசுரமாகும் சிறுகதைகளுள் சிறந்த ஒன்றுக்குப் பரிசளித்து வருகிறது. இதில் அடுத்தடுத்து டிசம்பர், ஜனவரி மாதங்களுக்கு ஆர். பி. செல்வமும் (ஞானம்பாள் செல்வம்) ஷைலஜாவும் கல்கியில் வெளியான சிறுகதைகளுக்காகப் பரிசுகள் பெற்றுள்ளனர். இதற்குச் சில தினங்கள் முன்னதாகத்தான் பிரபஞ்சன் கல்கியில் எழுதிய சிறுகதைக்கு சென்னை, இலக்கிய சிந்தனை பரிசும் சான்றிதழும் கிடைத்தது.



* தந்தைக்கு உதவி



* .....சிறுகதைகள்.

* ஆர். பி. செல்வம்.



* .....சிறந்த......

* ஷைலஜா

* த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? 'தில்லு முல்லு' என்றால் என்ன சார்?

! மார்க்கோஸ் நடத்திய பிலிப்பைன்ஸ் தேர்தல்.

* பி. சத்தியநாராயணமூர்த்தி, சென்னை—93

? அண்மையில் காலமான சுகி அவர்களைப் பற்றி?

! வானொலியின் நாடகப் பிரிவில் அரும்பணியாற்றியவர் சுகி சுப்பிரமணியம். அவர் தயாரித்த "துபாஷ் வீடு" "காப்புக்கட்டி சத்திரம்" ஆகிய சமுதாயப் பிரச்னையுடன் கூடிய நகைச்சுவைத் தொடர் நாடகங்களை வானொலியில் கேட்டு 'இடி இடி'யென்று சிரித்தவர்கள், 'இனி அப்படிப்பட்ட நாடகங்களை என்று கேட்கப் போகிறோம்' என்றுதான் எண்ணுவார்கள். முதன் முதலாக அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் ரூ. 1000/— முதல் பரிசு பெற்ற "துறவி" என்ற கதையைப் போன்ற மறக்க முடியாத பல சிறுகதைகளை எழுதியவர் சுகி. தவிர, எழுத்துத் துறைக்கும் ஆன்மீகத் துறைக்கும் நல்ல வாரிசுகளையும் உருவாக்கி நமக்கு வழங்கிச் சென்றிருக்கிறார் எம். எஸ். பெருமாள், சுகி சிவம் ஆகியோர் வடிவில்.

* கா. சேட்டு முகம்மது, விருத்தாசலம்.

? தமிழக வரலாற்றில் எம். ஜி. ஆரின் ஆட்சிக் காலம் பொற்காலம்தானே?

! ஆரம்பத்தில் சில காலம் அப்படி இருந்தது உண்மைதான். ஆனால் இப்போதோ அமோகமான அறுவடைக் காலம்.

* ரூ. 10 பரிசு பெறுபவர்:

நா. இரகுநாதன்,
சின்னங்குப்பம்,
அரூர் வட்டம், தருமபுரி மாவட்டம்,
பின்: 636 903.

# அமைச்சர் திறந்து வைத்தார்;



# அன்றே இருவர் பலி!

மதுரை காந்தி மியூசியம் அருகே கட்டப்பட்டுள்ள நீச்சல் குளத்திற்கு 13.5 லட்சம் ரூபாய் செலவு செய்யப்பட்டுள்ளதாக மாநகராட்சி கமிஷனர் தேவராஜ் கூறினார். அப்படி என்ன புதிதாகவா நீச்சல் குளத்தைக் கட்டியிருக்கிறார்கள் என்று அந்த இடத்திற்குச் சென்று பார்த்தபோது, காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் அமைச்சராக இருந்த ராமநாதபுரம் சேதுபதி இந்த நீச்சல் குளத்தைத் திறந்து வைத்ததாக ஒரு கல்வெட்டு பொறிக்கப் பட்டிருப்பதைக் காண நேர்ந்தது.

அப்போது திறக்கபபட்ட நீச்சல் குளம் மறைந்துவிட்ட நினைவுச் சின்னம்போல் ஆகிவிட்ட பிறகு — மதுரை மாநகராட்சி ஏதோ ஹரப்பா, மொஹஞ்சதாரோ நகரங்களைத் தோண்டி எடுத்ததைப் போல் பழைய நீச்சல் குளத்திற்குப் புதுமெருகூட்டியுள்ளது.

பொய்யாக—கனவாகப்போய்விட்டதைத் தான் புதுப் பொலிவாக்கிக் காட்டியிருக்கிறார்கள். மொத்தத்தில்—பழைய பாத்திரத்திற்கு 'பாலிஷ்' போட்டுக் காண்பித்திருக்கிறார்கள் 13.5 லட்சம் ரூபாய் செலவில்.

துரதிர்ஷ்டவசமாக, நிதியமைச்சர் நெடுஞ்செழியன் திறந்து வைத்த அன்றே இந்த நீச்சல் குளம் இரண்டு பேரைக் 'காவு' கொண்டுவிட்டது. பல ஆண்டுகளாக மூடிக் கிடந்த குளமல்லவா? பசியால் வாடிய அந்தக் குளம் இரண்டு இளந்தளிர்களைத் தனது பசிக்கு இரையாக்கிக் கொண்டது போலும்!

திறப்பு விழாவன்று ஏராளமான பேர் குளிப்பதற்கு மாநகராட்சி டிக்கெட்டுகளை (கட்டணம் ரூ. 3) கொடுத்திருந்தது. ஒரே நேரத்தில் ஐம்பது பேர் மட்டும்தான் குளிக்கலாம். ஆனால் முந்நூறு பேருக்கு டிக்கெட் கொடுத்திருக்கிறார்கள். 'டைவ்' அடிக்கும் மேடையில் ஒருவர் மட்டும்தான் ஏறி நின்று 'டைவ்' அடிக்க வேண்டும். ஆனால் நான்கைந்து பேர் ஏறி நின்று டைவ் அடித்திருக்கிறார்கள்.

இதனால் மதுரை கீழ வெளி வீதியில் ஜவுளிக் கடை ஒன்றில் ஊழியர்களாகப் பணிபுரியும் சங்கர பாபு (வயது 18), பாஸ்கர் (வயது 16) என்ற இரண்டு வாலிபர்களும் மூச்சுத் திணறி இறந்துவிட்டார்கள்.

அன்றைய தினம் இரவு எட்டு மணி வரை நீச்சல் குளத்தில் குளிப்பதற்கு டிக்கெட் கொடுத்திருக்கிறார்கள். இரவு பதினொரு மணி அளவில் குளத்தை மூடுவதற்கு முன் சுற்றிப் பார்த்தபோது இரண்டு பேர் பிணமாக மிதப்பதைக் கண்டு, போலீஸுக்குத் தகவல் தெரிவிக்க, போலீஸார் தங்கள் 'சடங்குகள்' எல்லாவற்றையும் முறைப்படி முடித்துப் பிணங்களை வெளியே எடுத்தபோது நேரம் இரவு ஒரு மணி.

இவர்கள் இறந்து போனதற்குக் காரணம் மதுரை மாநகராட்சியின் பொறுப்பற்ற தன்மைதான் என்று முன்னாள் மாமன்ற உறுப்பினர், எஸ். காமராஜ் குற்றம் சாட்டுகிறார்.

"பதினொரு அடி ஆழமுள்ள நீச்சல்குளத்தில் போதுமான அளவு டியூப்கள் விடாமல் குளிப்பதற்கு அனுமதி கொடுத்ததும், ஆழமான பகுதிக்குள் போய்விட்டால் அவர்களைப் பாதுகாக்க ஆட்களை நியமனம் செய்யாததும், நீச்சல் பயிற்சியாளர்களை நியமிக்காததும், சரியாகப் பாதுகாப்புச் செய்யாமல் குளிக்க அனுமதித்ததும் கண்டிக்கத்தக்கது" என்கிறார் அவர்.

— ஸ்னேகப்ரியா.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).
Assistant Editor: P. S. Mani.
Editor: K. Rajendran.

காட்பரிஸ்

# போர்ன்விடா

## சுறுசுறுப்புப் பானம்!



"ஒரு டம்ளர் பாலிலே இரண்டு ஸ்பூன் போர்ன்விடா அதுவே நலமான சுவையான பானம்—அதை, என் குழந்தைகளுக்கு அன்றாடம் இருவேளை தருகிறேன்.

என் குழந்தைகளுக்கு, கோகோ, மால்ட், பால், சர்க்கரை ஆகியவற்றின் போஷாக்கினைத் தருகிறது போர்ன்விடா. அவர்கள் வளரும் காலம் முழுவதும் அவர்களுக்குத் தேவைப்படும் ஊட்டச் சத்தையும் சக்தியையும் அளிக்கிறது. அவர்கள் நல்ல வளர்ச்சி பெறுகிறார்கள். ஆகவே நல்ல வளர்ச்சி போர்ன்விடா பயிற்சி."

***போர்ன்விடாவின் இனிமைக்காலம். போர்ன்விடா அளித்துவரும் பானங்களை நேசத்தோடு நினைந்து மகிழும் ஒருநாள்***




இப்போது மிச்சமாக்குங்கள் ரூ. 2/- நல்லொரு ரீஃபில் பேக்கிலும்.

OBM/4688/TAM

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Srilanka

அம்மா ஜீ?

பார்லே-G!




## ஏன் 'பார்லே-G'?

நீங்கள் விரும்பும் ஒரு பிஸ்கட்டிற்கு
இது சுருக்கமான, இனிய செல்லப் பெயர்.
அது பார்லே க்ளுகோ என்பதில் சந்தேகம் இல்லை.
உண்மையில் 'பார்லே-G' என கூறும்பொழுது
நேச உணர்வு மிகுதியாகிறது. தவிர இப்பெயரில் அடங்கி உள்ள
ஜீவனுள்ள அம்சங்கள்—ஜீவனுள்ள சத்து—சுவையான பால்,
கோதுமை மற்றும் சர்க்கரையிலிருந்து கிடைக்கிறது.
ஜீவனுள்ள வளர்ச்சி—ஊட்டச் சத்து நிரம்பிய
க்ளுகோ இதனை வழங்குகிறது.
ஜீவனுள்ள ருசி—இது நீங்கள் அறிந்ததே!

**PARLE**

**Gluco**

# இதன் செல்லப்பெயர் 'பார்லே-G'

இந்தியாவில் அதிக விற்பனையாகும் பிஸ்கட். **சுவை மிக்க சத்துணவு.**